# செந்தமிழ்ச் செல்வி



## பொன் விழா ஆண்டு

தமிழ்மொழி, இனம், நாடு
இவற்றின் முன்னேற்றத்தைக்
குறிக்கோளாகக் கொண்டு
நடைபெற்றுவரும்
இத் திங்கள் வெளியீட்டின்
ஐம்பதாவது சிலம்பு

ஒன்பதாவது பரல்

## ‘செந்தமிழ்ச் செல்வி’

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

## உள்ளுறை



——

# வள்ளுவர் கோட்டத் திறப்பு விழா
(15 - 4 - 1976)



மாமண்டபமும் மாமணித்தேரும்



இந்தியக் குடியரசுத் தலைவர்
மாண்பமை பக்ருதீன் அலி அகமத் அவர்கள் திறந்து வைத்தல்

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

| சிலம்பு ருo | திருவள்ளுவர் ஆண்டு உoo௭, சித்திரை மே 1976 | பரல் கூ |
|---|---|---|

# வள்ளுவர் கோட்டம்

வான்புகழ் வள்ளுவரின் நீள்புகழ் என்றும் நின்று நிலவத் தமது ஆட்சிக் காலத்தில் உருப்படியானதொரு கலைப்பணியினைச் செய்தல் வேண்டுமெனக் கருதிய டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்களின் உள்ளத்தில் கருக்கொண்ட வள்ளுவர் கோட்டம், சென்னை நுங்கம்பாக்கத்தில் தமிழக அரசின் உதவியால் ஏறக்குறைய 70 நூறாயிர ரூபா செலவில் ஏற்றமும் எழிலும் மிக்கதோர் அழகொழுகும் கலைக்கூடமாக - மாமன்றமாக-திருக்கோயிலாக மிகக்குறுகிய காலத்தில் உருப்பெற்றுள்ளது.

எந்த ஒரு செயலும் யாராவது ஒருவர் மனத்தில்தான் கருக்கொள்ளவேண்டும். மனத்தில் கருக்கொள்ளும் எண்ணம் 'எண்ணியார் திண்ணியராகப் பெறின்' செயலில் உருக்கொண்டு நிலையான அமைப்பைப் பெற்றுவிடும். அவ்வகையில் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் வள்ளுவருக்காகக் கலைச்சிறப்புடன் கூடிய அருமையான கோட்டத்தை அமைத்துள்ளார். அவருக்குத் தமிழகம் நன்றிக்கடன் பட்டுள்ளது.

வள்ளுவருக்கு இத்தகையதொரு கோட்டம் அமைய வேண்டுமென்பது கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்களின் நீண்டநாள் அவாவாகும். வடநாட்டிலுள்ள மதுராவில் பெருஞ்செல்வர் பிர்லா சலவைக் கல்லில் கட்டிய கீதா மண்டபத்தில் கீதை முழுதும் பொறிக்கப் பெற்றுள்ளது. அதை 1956இல் காணும் வாய்ப்புப் பெற்ற அவர்கள் சென்னையில் அதுபோல் வள்ளுவர்க்கு ஒரு மண்டபம் அமைக்கப்பெறின் எவ்வளவு சிறப்பாக இருக்குமென்று எண்ணினார்கள். அதுபற்றி விரிவாகச் 'செந்தமிழ்ச் செல்வி'யில் முன்பு

(சிலம்பு ௪௯, பரல் உ) கட்டுரையும் எழுதி உள்ளார்கள். அவர் தம் வலிமையுற்ற அவாவும் 'வள்ளுவர் கோட்டம்' அமைப்பால் நிறைவுறுகின்றது.

இத்தகைய சீரிய கலைக்கூடம் அழகிய நுழைவாயில், மாமண்டபம், வள்ளுவர் சிலையினைக் கொண்ட சிற்ப வேலைப் பாடுகளமைந்த 101 அடி உயரமுள்ள கல்தேர், மாடித் தோட்டம், குறள் மணிமாடம், ஆராய்ச்சி நிலையம் ஆகியவற்றுடன் அமைந்துள்ளது.

இக் கலைக்கூடம் 15—4—76இல் இந்தியக் குடியரசுத் தலைவர் பக்ருதீன் அலி அகமது அவர்களால் திறந்துவைக்கப் பெற்றது. அப்போது அவர் தமது திறப்புரையில்,

> "அறிவுப் பணிகட்கும், கலாச்சாரப் பணிகட்கும் நடுவிடமாகத் திகழும் இந்த நிலையம் மலர்ந்து—வளர்ந்து உயிர்த்துடிப்புடன் செயலாற்றும் என நம்புகிறேன்.
>
> "ஓங்கி நிற்கும் இந்நினைவுச் சின்னம் இந்தத் தலை முறையினர்க்கு மட்டுமன்றி இனிவரும் தலைமுறையினர்க் கும் கலங்கரை விளக்கமாக விளங்கு மென்பதில் ஐய மில்லை"

எனப் பாராட்டியுள்ளார்.

**கோட்டத்தின் சிறப்புகள் :**

இக்கோட்டத்தின் கருவறையாக அமைந்துள்ள கருங்கல் தேர் 101 அடி உயரமும் 90 அடி அகலமும் 8 பட்டைத் தளமும் கொண்டு திருவாரூர்த் தேரினை நினைவூட்டும் வகையில் அமைந் துள்ளது. அதன் நடுவில் இரண்டேகால் அடி உயரமுள்ள கருங்கல் பீடத்தின்மேல் 8 டன் எடையுள்ள வள்ளுவர் சிலை அமைக்கப்பட்டுள்ளது. தேரின் உருளைகள் ஒரே கல்லில் செதுக்கப்பெற்ற சிற்ப வேலைப்பாடுகள் உடையன. தமிழகத் தின் தலைசிறந்த ஏறக்குறைய 1000 சிற்பிகளின் கைவண்ணத் தையும், கோட்டத்தின் மாடியில் 1,330 குறட்பாக்களும் சலவைக் கற்களில் செதுக்கப்பட்டிருக்கும் மாட்சியினையும் காணலாம். இஃது அனைத்துலகத் திருக்குறள் ஆராய்ச்சி நிலையமாகவும் திகழுமெனக் கூறப்படுகின்றது. முப்பாலை உணர்த்தும் வகையில் மூவகை வண்ணக் கற்பலகைகளில் குறட் பாக்கள் பொறிக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

இத்தகைய அருமையான கோட்டம் வெறும் காட்சிப் பொருளாக மட்டுமன்றிக் கருத்துக்கும் பெருவிருந்தாயமையும் வகையில் 'திருக்குறள்'பற்றி இதுவரை வெளிவந்துள்ள நூல்

களைத் தொகுத்து நல்லதொரு நூல்நிலையம் அங்கு அமைக்க வேண்டும்.

உலக மொழிகளில், இதுவரை வெளிவராத மொழிகளில், திருக்குறளை மொழிபெயர்க்க இங்கு ஓர் அமைப்பு ஏற்படுதல் வேண்டும். வெறும் மொழிபெயர்ப்பினால் மட்டும் உலகெங்கும் குறள் பரவிவிடாது ; பிறமொழிகளில் மொழிபெயர்ப்பதோடு நில்லாது அவற்றில் விரிவான உரைகளும் வெளிவர ஏற்பாடு செய்தல் நலம். பிறமொழியாளரும் ஓதி இன்புற அந்தந்த மொழி வரிவடிவங்களில் குறளை அச்சிடுதல் வேண்டும். திருக்குறள் பற்றி எல்லாவகையான ஆராய்ச்சியிலும் ஈடுபட நம் நாட்டினருக்கும் மேனாட்டினருக்கும் வாய்ப்பினை உருவாக்க வேண்டும்.

திருக்குறளை இசையோடு பாடச்செய்து நாடோறும் ஒலி பரப்புதல் வேண்டும். திருக்குறளின் புகழ் மென்மேலும் பரவ இக்கோட்டம் பயன்படும் என்று உறுதியாக நம்பலாம். வாழ்க வள்ளுவர் கோட்டம்! வளர்க அதன் புகழ்!

**வள்ளுவர் கோட்டம் பற்றிய கருத்துரைகள் :**

டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்களின் கலையுள்ளத்தின் அரிய படைப்பாகத் திகழும் வள்ளுவர் கோட்டம்பற்றி அறிஞர் பெருமக்கள் சிலரும், நடுநிலை இதழ்கள் சிலவும் அவ்வப்போது சில கருத்துரைகளை வழங்கி வருகின்றன. அவற்றின் சுருக்கக் கருத்துகள் சில வருமாறு :

> "வள்ளுவர் கோட்டம் ஓர் ஒப்பரிய நினைவுச் சின்னமாகும். இதன் ஒப்பற்ற கூறு மிகப் பெரியதொரு மண்டபமாகும். இதனை ஆசியாவிலேயே பெரியது என்றும், சீன நாடாளுமன்ற மண்டபத்தைவிடப் பெரியது என்றும் சொல்லலாம்".
>
> —"இந்துஸ்தான் டைம்ஸ்", புதுதில்லி (*19—4—1976*)

> இந்து மதக் கலையின் இரண்டாயிரம் ஆண்டுக்கால வரலாற்றில் நுங்கம்பாக்கம் வள்ளுவர் கோட்டத்தில் எழுப்பப்பட்டுள்ள கல்தேர்தான் முதன் முதலில் வடிக்கப் பட்டது என உறுதியாகச் சொல்லமுடியும்.
>
> "இந்தியன் எக்ஸ்பிரஸ்" (*24—4—1976*)

> "இந்த நினைவாலயம் இந்திய மக்களுக்காக மட்டுமின்றி உலக மக்களுக்கே காணிக்கையாகும். ஆசியா கண்டத்திலேயே இம்மண்டபந்தான் மிகப் பெரிதாகும்.
>
> —டெக்கான் ஹெரால்டு (*24—4—1976*)

———



# மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி

மாணவர், திருக்குறள்பீடம் குருகுலம்
அழகரடிகள் (இளவழகனர்)

## 9. மறுப்பழகு

'குட்டுப் பட்டாலும் மோதிரக்கையால் குட்டுப்பட வேண்டும்' என்று சொல்வது வழக்கம். 'மறுப்பாயிருந்தாலும் ஆசிரியர் மறைமலை அடிகளாரால் மறுக்கப்பட்டால் பாதக மில்லை', என்று சொல்வது தமிழகத்தில் ஒரு வழக்கமாயிருந்தது. இதற்கு எடுத்துக்காட்டு இல்லாமலும் இல்லை.

சிவபெருமான் தண்டித்தால் வானவர்க்கு வெற்றி; அப்படிக் கூறுபவர் மாணிக்க வாசகர்!

> ''நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்
> சயமன்றே வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ''
> (திருவாசகம், திருச்சாழல், 4)

நினக்குப் பகைவர் எனப் பெயர்பெறுதலும் எளிதன்று; அதற்கு அவரெல்லாரும் தவம் புரிந்திருக்க வேண்டும். அவ்வாறு சொன்னவர் மாங்குடி கிழார்.

> ''நோற்றோர் மன்ற நின்பகைவர்'' (புறம், 26 : 16)

''தேவர் குறளும் திருநான் மறைமுடிவும், மூவர் தமிழும் முனிமொழியும்'' என்னும் திருமொழியில் 'முனிமொழி' எது என்பது பற்றி அடிகளின் இளங்காலத்தில் அறிஞர்களிடையே ஓர் ஐயம் நிலவியது. அக் காலத்தில், 'திராவிடப் பிரகாசிகை' என்ற ஒரு நூல் எழுதிய சபாபதி நாவலர் என்பவருக்கும், அடிகளாருக்கு ஆசிரியராகிய சோமசுந்தர நாயகருக்கும் இது பற்றி ஒரு கருத்து மாறுபாடு இருந்தது.

சபாபதி நாவலரும் பெரும் புலவர்; திருவாவடுதுறை ஆதீனத்தால் மிகவும் மதிக்கப் பெற்றவர். அவ்வாதீனத்தின் புலவராக விளங்கியவர். யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர்க்கு மாணவர்; உரை நடை கைவந்தவர்.

சோமசுந்தர நாயகரின் கருத்து, 'முனிமொழி' என்பது, சமக்கிருதத்திலுள்ள 'வியாச சூத்திரம்' ஆகிய 'மகா வாக்கியம்' என்பது. சபாபதி நாவலரின் கருத்து, மாணிக்கவாசகர் திரு மொழிகளாகிய திருவாசகம், திருக்கோவையார் என்பது.

மறைமலை அடிகளார் தம் ஆசிரியர் நாயகர் அவர்களைத் தெய்வம் எனப் போற்றுபவர்; நாயகர் கருத்தை நிலைநிறுத்த மறைமலை அடிகளார் முற்பட்டு, 'முனிமொழிப் பிரகாசிகை' என்று ஒரு மறுப்புநூல் எழுதினர். அந் நூலில் சபாபதி நாவலர் கருத்து மறுக்கப்பட்டது. சிறிது காலத்தில் நாவலர் அவர்கள் இறக்குந் தறுவாயில் இருந்தபோது, நாகை வேதாசலம் என்பவர் (மறைமலை அடிகள் என்பார்க்குப் பிள்ளைமைப் பெயர்) மறுப்பெழுதினர் என்ருல், அதில் தமது கருத்து மறுக்கப்பட்டிருப்பினும், தமிழ்ச் சுவை விஞ்சியிருக்கும்; மறுப்பழகு மேம்பட்டிருக்கும்; தமக்குப்பின் இலக்கண இலக்கியத் திறமும், தமிழ் நலமும் மேம்படும்படி சிறந்த உரைநடை எழுதக் கூடியவர் தமிழகத்தில் நாகை வேதாசலமே என்று மகிழ்ந்தும் வியந்தும் பாராட்டிப் பேசி, அடிகளையும் நேரில் பார்க்க விரும்பினர் என்று ஆர்வமாய்ப் பலரும் சொல்லுவர்.

ஒட்டக்கூத்தர் என்னும் பெரும்புலவரும் தாம் இறக்குந் தறுவாயில், "புகழேந்திப் புலவர் வெண்பாக்களில் இரண்டொன்றைப் பிழிந்து எனக்கு மருந்தாகக் கொடுங்கள்" அதாவது, அவர் வெண்பாக்களின் சுவைகளை எடுத்துச் சொல்லுங்கள் என்று சொல்லி அவற்றின் அழகைப் பாராட்டிப் பேசினர் என்று கூறுதலும் உண்டு.

மறுப்பு நூல் எப்போதும் உணர்ச்சி மிகுக்கும். அதனுல் பெருமித நடை கைவரும். நுண்ணுணர்வும் நூல் ஆராய்ச்சியும் அம் மறுப்பைக் கற்பார்க்கு மிகப்பெருக்கும். மறுப்பு என்பது ஆராய்ச்சியோடு நிகழ்வதாதலால், மாணவர்க்கு நுட்பத் திறன்களுடன் புலமையும் மிகும்.

உரையாசிரியரின் உரைநடைச் சிறப்பும், ஏனைய உரைநடையாசிரியர்களின் நூலும் இம் மறுப்புச் சிறப்பினுலேயே எழுச்சியும் கிளர்ச்சியும் மிகுத்தன. எந்த எழுத்தும் பேச்சும், வெளிப்படையாகவோ உள்ளுறையாகவோ, பொய்க் கருத்துக்களை மறுத்து மெய்க் கருத்துக்களை நிறுவும் முறையை மேற்கொள்ளவில்லையென்ருல், அந் நூல்களைப் படிப்பதற்கு அவ்வளவாகச் சுவைத்திறன் மிகாது.

செய்யுள் நடையில்கூட இம் மறுப்புச்சிறப்பு மேம்பட்டிருப்பதை, அவற்றைக் கற்பார் நன்கறிவர். கூந்தலின் மணம் செயற்கையானதன்று என மறுத்து மொழிந்த 'இறைவன் தமிழ்' இங்கு நினைவு கூர்தற்குரியது.

ஆசிரியர் திருவள்ளுவர் இவ்வாற்ருல் "மெலியார்மேல் மேக பகை" என்று கூறிப் பகைமாட்சியென ஓர் அதிகாரமும் திருவினர்.

நக்கீரர், நெற்றிக்கண் காட்டிய முக்கணரை மிகத் துணிவுடன் எதிர்க்கும் உள்ளம் வாய்ந்தவராய் விளங்கினர்.

ஆய்வதினும் மேம்பட்டது மறுக்குந் திறன்; ஆய்வு முறை அறியாதார் மறுக்கப் புகுதல் பேடி கை வாளாண்மை போன்றது. ஆராய்ச்சி முடிவை உரைப்பதற்குத் தேவையான துணிவைவிட, மறுத்துக் கூறுவதற்கு மிகப் பெருந்துணிவு வேண்டும். நக்கீரனருக்கு அத் துணிவு மிகுந்திருந்தது.

மறுப்புக்கு உட்படாத, குற்றம் தீர்ந்த நூல்கள் தமிழிற் பல; எல்லாவற்றினும் பார்க்கத் திருக்குறள், மறுப்புக்கே இடமில்லாத அழகிய மூல நூல். 'சீத்தலை' என்னும் ஊரில் திகழ்ந்த சாத்தனர் என்னும் பெரியவருக்கு அந்நூல் ஒரு மருந்துபோல் உதவியது. பிழையற்ற நூல்கள், தக்கோர் வாழ்நாளை மிகுத்து வருகின்றன என்ப; மண்டை இடி தீர்த்த மாமறை நூலாய்த் தெய்வத் திருக்குறள் மேம்பட்டிருந்தது. திருக்குறள் பயின்று அதனல் வாழ்க்கையில் அமைதியைப் பெற்றவர் பலர். மறுப்பு மாட்சியாகிய முறை, தமிழ்க்கு அச் சிறப்பை நல்கியுள்ளது. மறுக்கப்படுமோ என்று ஒரு நினைவும் இருந்தால் மட்டுமே, நல்ல நூல்கள் வெளிவரும்; இதற்காகவே, தமிழகத்தில் சங்கமும், நூல் அரங்கேற்றமும் முன்பு விளங்கின; மறுக்குந் துணிவுமிக்க மாபெரும் புலவர் நக்கீரனர் சங்கத் தலைவராய்த் திகழ்ந்தார்; சிறந்த நூல்கள் வெளிவருதற்கே இச் செயல் முறைகள். 'சங்கத் தமிழ்' என்னும் பெயர்வழக்கு இப் பெரும் புகழ்க்கு உரியது.

மறுப்புக்கள் பல வகை :

பொதுவாக, மாற்றார் கேட்பதுபோல் தாமே கேள்விகளை அடுக்கிக் கொண்டு, அவற்றுக்கு விடை கூறுதல் மறுப்பு முறையில் ஒருவகை; முன்னூல்களில் வெளிவந்திருக்கும் கருத்துக்களை அவை ஒவ்வா என்று வேறு கூறுதல் மற்றொரு வகை; எதிர்க் கருத்துடையார் தம் காலத்திலுள்ளவராய் இருந்தால், பெயரை வெளிப்படுத்தாமல் எல்லார்க்கும் உரியவாம்படி மறுப்புத் தெளிவித்தல் இன்னொரு முறை; தம் காலத்திற் கருத்து வேறுபட்டோர் இன்னரென்று தெரிந்து அவர்கள் தகுதிக்கு ஏற்ப மறுப்பெழுதுதல் பிறிதொரு முறை; கருத்து வேறுபட்டோரின் செம்மல் சிதைத்து மீண்டும் அவ்வாறு தலைப்படாமல் திருந்தும் முறையில் விளக்கந் தருதல் வேறொரு முறை ; மறுப்பெழுதினர்க்குத் திரும்ப மறுக்கும் முறையும் உள்ளதாதலின், அதற்கும் மறுப்பெழுதினரை முடிவாய் மறுக்கும் திறமும் காணப்படும்.

எல்லா வகைகளிலும் ஆசிரியர் மறைமலை அடிகளார் வல்லவர். இப் பயிற்சி அவர்களுக்கு இளங்காலம் முதலே ஒழுங்குபட்டு வந்திருக்கிறது.

மறுப்பு முறைக்கு அடிப்படை, அளவையியல், (தருக்கம்). இலக்கண இலக்கியப் பன்னூல் ஆய்வு முதலியனவெல்லாம் இதற்குத் துணை; எழுதுதலும், பேசுதலோடு ஒக்கும்; பேசுதல், எதிர்க் கருத்துடையாரிடம் நேரில் இருந்து பேசுதற் குரியது. அது நேர் எதிர்ப்பாடாய் முடிகிறது. ஆதலால் எழுதுதலைவிடப் பேசுதலுக்கே வல்லமை மிகுதி.

பேசத் தெரியாதவரைப் பற்றி ஆசிரியர் திருவள்ளுவர் 'அவையறிதல்', 'அவை அஞ்சாமை' முதலிய அதிகாரங்களைத் தமது திருமறையில் வைத்து அழகு செய்திருக்கிறார்; கற்றோர்க்கு இச் சொல்வன்மை முக்கியமாதலின், நா நலம் என்னும் நலனுடைமை யா நலத்தும் உள்ளதன்று. காரணம், ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்; 'ஞாலம்' விரைந்து தொழில் கேட்கும், என்று 'சொல்வன்மை' அதிகாரத்திலும் திருவள்ளுவர் விளக்குவார்.

கல்வி வல்லவர்கள், அப்போதுதான் மணங்கமழும் மலர்கள் ஆவார்கள்; அல்லாதார் வெறும் பூக்கள் போல்வாரே; அவை அறிந்து, குறிப்பறிந்து, அவை அஞ்சாது, சொல் வழங்குவோர், கற்றோருள் கற்றார் எனப்படுவர். கூறியதே கூறாமல் மிகச் சுருக்கமாக மறைநூல் உதவிய திருவள்ளுவர், சொற்களைப் பற்றிச் சொல்லும்போது மட்டும் 'சொல்லின் தொகை யறிந்த தூய்மையவர்' என்பதை இருமுறை சொல்லுகிறார். அங்ஙனம் சொல்லும் வகையிலும், தூய்மை என்பது சொல்லின் வழியில் உண்டாகிறது என்பதை நன்கு புலப் படுத்துகிறார்.

அவாக் கெட்டால் தூய்மை உண்டாகும். அந்தத் தூய்மை வாய்மையால் வரும். வாய்மை பெரும்பாலும் வாய்மைச் சொல்லால் வெளிவருவது; அகம் தூய்மையென்பது இது. அதனால் உள்ளத்தால் பொய்யாது ஒழுகுதலைப்பற்றி ஆசிரியர் கூறுவார். வாய்மையை உரைப்பதனால், 'வாய்' என்று முகத்தில் ஒர் உறுப்பும் பெயர் பெற்றிருக்கிறது. சொற்கள் இவ்வாறு அகந் தூய்மையாய் வெளிப்படுகின்றன.

ஞான நூல்களில் 'சொல்' என்பது தூய மாயையில் விந்துவில் (சக்தி தத்துவத்தில்) தோன்றுவதென்று சொல்லப் படும். மறை மொழிகள் அந் நிறைமொழிகளால் வெளிப்படுவ

தனுல் 'சாதாக்கிய தத்துவத்'தில் அது தோன்றுகின்றது என்பர்; சிவலிங்க நிலையில் மறை நுட்பக் கருத்துக்கள் 'ஓம்' என்பதும், 'நமசிவாய' என்பதும் உள்ளன.

அந்நிலையெல்லாம் கைவந்த பெரியவரே மறைநூல் அருளிய திருவள்ளுவர். அதனுல், எல்லா ஆசிரியர்களுக்கும் திருவள்ளுவர் மேம்பட்டவர் ஆகின்ருர். தூய சொற்கள், ஞான நூல்களில் எழுத்து, சொல், மந்திரம் என்று மூவகைப்படு கின்ற சொல்லுலகமாகக் கூறப்படும்; உலகத்திற் காணப்படும் உடல் முதலியவைகளும், உலகத்திலுள்ள நுகர் பொருள்களும் மேற்காட்டிய சொல்லால் உணர்த்தப்படுவனவே இவை பொருளுலகம் எனப்படும். சொல்லுலகம், பொருளுலகம் இவ் விரண்டும் சொல்லின் பொருள் ஆதலால் (அர்த்தம்), அகந் தூய்மை உடையார்க்கே எளிதிற் கிட்டுவனவாய் இருக்கின்றன. இவற்றிற் பொருளுலகம் என்பது, சொல்லின் அர்த்தம் ஆத லால் சொல்லுலகமே சிறந்ததாகின்றது. 'விரைந்து தொழில் கேட்கும் ஞாலம்' என்னும் மறைமொழி இவ்வடிப்படை யுடையது. சொற்கள் வாயின் மூலம் அதாவது வாய்மையின் மூலம் பிறர் பொருட்டு வெளிப்படுகின்றது. அகந் தூய்மை யாகிய வாய்மை உடைய பெரியோரே இதற்குத் தகுதியுடைய வர். அதனுலேதான் திருக்குறள் திருமறை இனியவை கூறல் என்பது. படிறு இல்லாமல் செம்பொருள் கண்டார் வாயில் வெளிவருவதென்று அவ்வதிகாரத் தொடக்கத்திலேயே தெளி வித்தது. 'இன்சொல்' என்றும், 'அதுவே அறம்' என்றும், 'அதனுல் வறுமை உண்டாகாது' என்றும், 'தீமைகள் தேய்ந்து விடும்' என்றும், 'தக்க பயன் தரும்' என்றும், 'பண்புடைமைக்கு அடையாளம்' என்றும், 'பெருந்தன்மை யுடையது' என்றும், பலவாருகச் சொல்லிக், கனிபோன்ற இன்சொல்லைத் தனக்கும் பிறர்க்கும் இன்பம் பயக்கும் இன்சொல்லை, வழங்காமல், மக்கள் ஏனே வன் சொல்லை வழங்குகின்றனர் என்றும் இரக்கத்தோடு அருள் செய்கின்ருர்.

பேசுவதன் பிழிவே எழுதுதலாதலின், இங்ஙனம்சொற்கள் பேச்சு எழுத்து என இரண்டு நிலைகளிலும் உலகுக்குப் பயன் பட்டு வருகின்றன. இரண்டிலும் முதன்மை, பொருள்களல்ல; சொற்களே; ஆதலால் இவற்றைப் பயன்படுத்தும் ஆற்றலு டைய புலவர் பெருமக்கள் அகந் தூய்மை வாய்ந்தவராய் இருப் பது இன்றியமையாதது.

தமிழ் மொழியைப் பயில்வோர் பெரும்பாலார்க்கு இந் நோக்கம் இருக்கிறது. மற்ற மொழிகளைப் பயில்வோரிலும்

இந்நோக்கம் இருக்குமிடங்களில், பேச்சாலும் எழுத்தாலும் உலகுக்குப் பெரும் பயன் உண்டு. நூல் நிலையங்கள் இதனால் 'கோயில்' என்றே மதிக்கப் பெறுகின்றன. தூய்மை, இங்ஙனம் எங்கும் போற்றப்படுகின்றது.

பேசத் தெரியாதவர்கள் பேச்சுக்கு ஏற்றவர் அல்லர்; எதனையும் உண்மையோடு பேசுதலே 'வாதம்' எனப்படும். சொற்களைக் கையாளத் தெரியாமல் அதாவது பேசத் தெரியாமற் பேசுதல், தூய்மையை இழத்தலாகும், வாழ்க்கைக்கே அது தோல்வி நிலையை உண்டாக்கும் (தோல்வித் தானத்தை) அகந் தூய்மையால், வாய்மைச் சொற்கள் வெளிப்பட்டுத், தமக்கும் பிறர்க்கும் வாழ்க்கையொழுக்கமே அமைவதானால் மட்டுமே, வாழ்க்கையையே தூய்மையாய் அது 'வெற்றித்தான' மாகும். அல்லாவிட்டால் வெறும் சொல்லலைகளாகப் பேச்சு நிகழ்ந்துவிடும்; அது, வெற்றுக் கற்றலாகிய கற்றுக் குட்டியின் இயல்பு; 'நிற்க அதற்குத் தக' என்னும் மறைமொழி எவ்வளவு அழுத்தமும் ஆழமும் முதன்மையும் உடையது என்பது இதனால் விளங்கும். வாழ்க்கைக்கு வராத கல்வி, வெற்றுக் கல்வியே.

'தோல்வித் தானம்' அளவை முறையில் இருபத்திரண்டு வகைகளாய் உள்ளன. ஆசிரியர் மறைமலையடிகள் இவ்வகைகளை நன்கறிந்த பெருமானார்; 'முதற் குறள்வாத நிராகரணத்' தில், இத்தோல்வித்தானங்களில் பாதிக்குமேற் குறித்து, எதிர் பார்த்தவர் முறை பிறழ்ந்து பேசுதலை அடிகள் குறித்திருக்கிறார். வகையறிந்து மறுப்பெழுதும் ஆற்றலாய் அவர் எழுத்துக்கள், பேச்சுகள் (விரிவுரைகள், நடைமுறைப் பேச்சுக்கள்) மறுப்பழகு மிகுந்துள்ளன.

இதில், அழகு என்பது, வெறுங் கற்றல் அன்று; மணங் கமழும் மலரென விளங்குபவராய்ச், செம்பொருள் கண்டவராய்த், தூய வாழ்க்கை உடையவராய்ப், பயனிலாச் சொல் சொல்லாதவராய், அரும்பயன் ஆய்பவராய், இவ்வாறு அகந் தூய்மை உடையவராய், அதனால் சொல்லின் தொகையறிந்த தூய்மையவராய்க், கற்றுருள் கற்றவராய்ப், பேசும் சிறப்பாகும். அடிகள் இவ்வழகுச் சிறப்புடைய வெற்றித் திருஉடையவர்! அடிகளார் நூல்கள் எல்லாவற்றிலும் இம் மறுப்பழகு மிகுந்து, தூய்மைக்குப் பாடுபடுகின்றது.

'ஏனோ இவ்வாறு மறுப்பு முறைகளில் அடிகளார் ஈடுபட வேண்டும்?' என்று எண்ணும் அறிஞர்களும் உண்டு. காரணம், மேலே காட்டியவற்றால் விளங்கும்.

**வாழ்க்கைப் புரட்சி :**

'அறத்தொடு படுத்தல்' என்று தமிழகத்தில் நெடுங்காலமாகவே இப்புரட்சிமுறை நடந்து வருகிறது. புரட்சிமுறை என்பது மறுப்பழகுதான். வாழ்க்கையிலேயே அங்ஙனம், மறுத்தொழுகுதல், மறத்தை மறுத்து அறத்தொடு படுத்தல், தமிழர் வாழ்க்கை முறை; இது, தமிழர் நாகரிகம்; தொன்று தொட்ட மலத் தொடர்பு இருத்தலால், மறம் நிகழ்வது இயற்கை; அதை மறுத்து வென்று அறத்தின் வழி ஒழுகுவது தான் சிறப்பு.

ஒரு தலைவி தன் காதலனை அற முறையில் விரும்புகின்றாள். பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் இது இணக்கமில்லாததாய்த் தோற்றுகிறது. அந்நிலையில், தன் சுற்றத்தார்க்காக அறத்திலிருந்து வழுவுதல் முறையற்றது என்று உள்ளம் உறுதி கொண்டு, தலைவி தன் தோழியினிடம்,

> "வள்ளி கீழ்வீழா; வரைமிசைத் தேன்தொடா;
> கொல்லை குரல்வாங்கி ஈனா மலைவாழ்நர்
> அல்ல புரிந்தொழுக லான்"

என்று வருந்திக் கூறி அறமுறைமையையே பின்பற்ற விரும்புகின்றாள்.

வள்ளிக் கிழங்கு மிகுதியாக நிலத்தில் பெருகுதலும், மலையுச்சியில் தேன் வண்டுகள் தேனடை சேர்த்தலும், கொல்லையில் தினை முதலிய பயிர்கள் கதிர் தருதலும் இம் மலையில் இனி நிகழமாட்டா என்னும் உலகியற்கை எவ்வளவு சிறந்ததா யிருக்கிறது! மலைவாழ்நர் முறையற்றதைச் செய்வதனால் ஓரறிவு உயிர் முதலிய சிற்றறிவு உயிர்கள்கூட, உதவா என்று, அவள் முதல்வனது அறத் திறத்தை, புரட்சி முறையை, மறுப்பழகை, வாழ்க்கையொடு படுத்து, வல்லாங்கு பேசுகின்றாள். சங்கச் செய்யுளாகிய இது, தமிழகத்தில் அறத்தொடு படுத்தலை அருமையாக விளக்குகிறது.

இவ் வாழ்க்கைப் புரட்சியே இடைக்காலத்தும், இக்காலத்தும், எக்காலத்தும் தொடர்ந்து நிகழ்ந்துவருகின்றது. பொதுமறைநூலாகிய திருக்குறளை அருளிச் செய்த திருவள்ளுவ தேவர் அறத்துப்பாலை முதலில் நிறுத்தி, அறத்தால் பொருளையும் இன்பத்தையும் மக்கள் அடைந்து வாழ்ந்துவந்தால் மட்டுமே அறவோன் ஆகிய ஆண்டவன் திருவருளைத் தலைக்கூடிப் பேரின்பம் அடைய இயலும் என்று உண்மை கண்டு,

"அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்த லரிது"

என்று அருளிச் செய்தார்.

ஐம்பெருங் காப்பியங்களுள் தலைசிறந்ததாய்த் திகழும் இளங்கோவடிகளின் சிலப்பதிகாரம், கடைசியாய்த்

"தெய்வம் தெளிமின், தெளிந்தோர்ப் பேணுமின்"

என்பது முதலாக அறவாழ்க்கையை வற்புறுத்துகின்றது. சிலப்பதிகாரத்தின் புகார்க் காண்டம் அறத்தையும், மதுரைக் காண்டம் பொருளையும், வஞ்சிக் காண்டம் அறத்தான் வரும் இன்பத்தையும் புலப்படுத்துவன.

அடுத்துத் தோன்றிய தேவார திருவாசகத் திருமுறைகள் இந்த அறப்பயனை நன்கெடுத்துக் காட்டும், இராமலிங்க அடிகள் அண்மையில் நமக்குக் கிடைத்த பெரும் புரட்சியாளர். "தமிழகம் முழுதும் திருக்கோவிற் கருவறைகளில் விளங்கும் சிவலிங்கப் பெருமான் சோதி வடிவினரே" என்று கண்டு, வடலூர் என்னும் தனித் தலத்தையும் ஞான சபையையும் அமைத்துப் பெரும் புரட்சி செய்து, அதனை உயிரிரக்கத்தால் (சீவகாருணியத்தால்) அடைவது எளிது என்று தெளிவித்து, எல்லார்க்கும் பொருந்துகின்ற சன்மார்க்க நுட்பத்தை எடுத்து விளக்கினர்.

ஆசிரியர் மறைமலையடிகள், நம் கண்ணெதிரில் 75 ஆண்டுகள் வாழ்ந்து, எல்லாத் துறைகளிலும் மறம் மறுத்து அறம் செழிக்கப் புரட்சி செய்த ஈர நெஞ்சினர் ஆவர். அவர் வாழ்க்கையே பொய்களை மறுத்து மெய்களைத் தழைப்பிக்கும்; இந் நிலவுலகில் தோன்றியதிலிருந்து மறையுங் காலம் வரையில், பெரிய புரட்சித் தலைவராய், மறுத்தொழுகும் அழகு மிக்கவராய் விளங்கினர். வாழ்க்கையிலேயே இங்ஙனம் மறம் மறுத்தொழுகும் அறச் சிறப்பு மேவினால்தான், நூல்களும் தக்க மறுப்பழகில் மேம்பட்டு, எல்லார்க்கும் நலந் தருவதாய் இருக்கும். புலால் மறுத்து, மாறுபா டில்லாத உண்டி மறுத்து, சாதி குலச் சழக்குகள் மறுத்து, பொய்க் கொள்கைகள் மறுத்துப், பொருந்தா நாகரிகங்கள் மறுத்து, தாய் மொழியும், தாய்ச் சமயமும் அறியா அறியாமை மறுத்து, பிறந்து பிறந்து இறக்கும் ஆவிகளையும் சிறு தேவதைகளையும் அதி தேவர்களையும் எத்தகைய நெருக்கடியிலும் மறுத்து, மனிதர்க்கு மனிதர் அடிமையாதலை மறுத்து, விடுதலை வீரராய், 'முழுமுதற் சிவத்தின் தமர் நாம், அஞ்சுவது யாதொன்றுமில்லை, அஞ்ச வருவது மில்லை' என்னும் உரம்மிக்கவராய் அடிகள் வாழ்ந்துவந்தனர். வாழ்க்கை

வேறு; எழுத்தும் பேச்சும் வேறு என்றிருப்பவர் நற்குணம் இல்லாதவராவார்; நல்லவராகமாட்டார்; மெய்மையில் ஒழுகும் பொய்யடிமை இல்லாத பெரும்புலவராய் அடிகள் திகழ்ந்தார்.

வாழ்க்கை நெடுக, பொய் யுலகத்தை மறுத்து அதனை மெய்யில் திருத்தவே அடிகளார் தம் வாழ்க்கையாலும் நூல்களாலும் மறுப்புகளை மிகுத்தார்.

'ஏன் மறுக்கிறார்?' ஏதாவது படித்துக்கொண்டு எழுதிக்கொண்டு நாள் கழிக்கலாமே என்றால், காந்தியடிகள் ஏன் ஏதாவது புரட்சி செய்துகொண்டு உழைக்கவேண்டும்? அது அவரவர் இரக்கவுள்ளத்தைப் பொறுத்தது. இரக்கம் இல்லாமல் தன்னலமே மிகுந்து உண்டுடுத்து மாய்பவராய் இருந்தால், எவ்வகை மறுப்பும் அவர் வாழ்க்கையிலோ நூல்களிலோ இராதுதான். இரக்கம் மிக்க அடிகளார், அவ்வாறு இருத்தல் சற்றும் இயலாது. அவர் அருளிய அறிவு நூல்களைப் பார்த்தால், அடிகளார் வாழ்க்கை இனிது புலப்பட்டுவிடும். வாழ்க்கையை நேரில் பார்த்திருப்பவர் எவர்க்கும், அவர் நூல்கள் செய்த மறுப்புப் புரட்சி விளங்காமற் போகாது.

**இலக்கணமும் தருக்கமும் :**

அடிகளார் ஒப்பற்ற பெரும் புலவராய்த் திகழ்ந்தமைக்குக் காரணம், அவர் வாழ்க்கை இயலின் பெரும் புரட்சியே; எழுத்தும் பேச்சும், இலக்கணமும் தருக்கமும் வாய்ந்தவை.

இலக்கண நெறி அமைந்த நூல் தக்க இலக்கியமாய் அமைந்து திகழும். இலக்கண நெறி ஆராய்ச்சித் திறனை நன்கு புலப்படுத்தும், மிகுக்கும்.

எழுத்துக்கும் பேச்சுக்கும் தருக்க நெறியும் இன்றியமையாதது. ஒரு கருத்தை மேற்கொள்வது மேற்கோள்; மேற்கொண்டவர் அதற்கேற்ற காரணமும் விளக்குவர்; எடுத்துக்காட்டுக்களாலும் ஏதுக்களை வலியுறுத்துவர். 'மேற்கோள்', 'ஏது', 'எடுத்துக்காட்டு' என்னும் இம்முறைமையில் நூல்கள் நடவாமற் போனால், மக்கள் உள்ளத்திற்கு அமைதி உண்டாகாது. இலக்கண நெறி, மொழித் திருத்தத்துக்கு உதவும்; தருக்க நெறி கருத்தமைதிக்கு உதவும். 'சிவஞான போதம்' என்னும் மிகச் சுருங்கிய நுட்ப நூல் தமிழகத்தில் தருக்க அமைதியுற்று இம்முறைமையில் எழுந்தது.

மேற்கோள் என்பது எடுத்துக்காட்டன்று. ஒருவர் மேல் கொள்ளும் கருத்தை அது புலப்படுத்துகிறது; வாழ்க்கையிற் நடைபெறுவதற்காக அவ்வாறு அவர் மேற்கொள்ளுவதனால்,

இது 'காட்சியளவை'யிற் சேரும்; நடைமுறையில் நேரிற் காணும் முறை!

காரணத்துடன் கருத்தை மேற்கொண்டால், மேற் கொள்வோரின் பேரறிவு சுடர்விட்டு விளங்கும். நின்று நிலைக்கும். பள்ளியில் மாணவர்கள் பயிலும் முறையும் அவர் பயிற்சியிற் காணும் தேர்வு முறையும் 'ஏது என்ன' என்னும் சூழ்நிலையைச் சிந்தனையைப் புலப்படுத்துவதாகும். கல்வி இவ்வாறு சிந்தனைச் செல்வம் விளைத்து மக்களை மேம்படுத்துகிறது. ஏது கருதலளவையிற் பொருந்தும்.

இனி, எடுத்துக்கொண்ட மேற்கோட் கருத்தும் அதற்குரிய காரணமும், எவ்வளவுதான் தெளிவாயிருந்தாலும், நடைமுறையிற் காணப்படும் எடுத்துக் காட்டுக்களால் வாழ்க்கையிற் பின்பற்றுதற்கு எழுச்சி உண்டாகும். இது, உரையளவையில் அடங்கும்.

இயற்கையிற் காணப்படும் எடுத்துக் காட்டுக்களும் சான்றோர் உரையாகிய எடுத்துக் காட்டுக்களும் என எடுத்துக் காட்டு இருவகைப்படும்; இயற்கை நிகழ்ச்சி அவரவர்க்குத் தென்பட்டால் மட்டுமே எடுத்துக்காட்ட இயலும். தென்படாத நிலையில், சான்றோர் உரைகள் உதவும், உரைகள் என்பது, சான்றோர் திளைத்துத் தெளிந்தன வாதலால், பிறர்க்கு அவை எட்டுதற்கரியன. அதனால் உரையளவை இன்றியமையாத தாயிற்று.

இத் தருக்க நெறி, முறை பிறழாத நூல் நெறி; நூல்கள் எவ்வளவுதான் இலக்கண இலக்கிய நெறியுடையனவாய் இருந்தாலும், மக்களுக்குத் திருத்தத்தை உண்டாக்கா; முறை பிறழ்ந்து பேசுதலும் எழுதுதலும் தருக்க நெறி அமையாதன என்றும், வாழ்க்கையோடு தொடர்பு படாதன என்றும் சொல்லி, அவற்றைத் தோல்வித் தானங்களாக அறிஞர் ஒதுக்கி விடுவர்.

காண்டல், கருதல், உரை என்னும் அளவைகளாகிய இத் தருக்க நெறி பின்னும் பலவாய் வேறுபட்டு நூல்களின் நடைமுறைக்கு வழி செய்கின்றன. அவையெல்லாம் 'சிவஞான சித்தியார் சுபக்கத்'தில் அருணந்தி சிவம், தொடக்கத்திலேயே வைத்து விளக்கி, இம்முறைமையில் மெய்கண்ட நூல்கள் திகழ்கின்றன என்று 'நூல் நெறி' தெருட்டுகின்றார்.

ஆசிரியர் மறைமலையடிகள் தமது இளமைக் காலத்தில் இலக்கண இலக்கிய நெறிகளில் மட்டுமன்றி இத் தருக்க நெறியிலும் நன்கு பயின்று புலமை மிகுந்தவராதலால், அவரிடம்

யாரும் முறை பிறழப் பேசவோ எழுதவோ இயலுவதில்லை. எல்லாம் வல்ல இறைவனது இயற்கை நிலையே இந் நூல் நெறியில் தருக்க நெறியில் அடங்காதது, அப்பாற்பட்டது!

"ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர் விட்டுளன் எங்கள்சோதி." 3: 54. 5

என்றார் திருஞான சம்பந்தர்.

மற்ற உயிர்களினியல்பும் உலகியற்கையும், முறையுமெல்லாம் வாழ்க்கை நெறிக்கு உட்பட்டவையே; உலகியற்கையிலும் உயிரியற்கையிலும் கலந்து பயன்படும்போது, இறைவனும் தருக்க நெறியோடு பிறழாமலே ஒத்துத்தான் இயங்குவான்.

சான்றோர் நூல்களெல்லாம் இலக்கண நெறியோடு இத் தருக்க நெறியும் அமைந்தவை. மறைநூல் ஆகிய திருக்குறளின் அதிகாரம் ஒவ்வொன்றும், இலக்கண இலக்கிய நெறிகளோடு இத் தருக்க நெறியின் அடிப்படையில் முன் பின் தெரிவிக்க வேண்டிய முறைபிறழா நிகழ்ச்சிகளும் கொண்டுள்ளன.

அதிகாரத்தின் முதலில் பெரும்பாலும் அந்த அதிகாரம் மேற்கொள்ளும் கருத்து அமைந்திருக்கும். அடுத்து, அக் கருத்தை ஏதுக்களால் விளக்கி மேன்மேலும் தெளிவுபடுத்தும். தக்க உவமைகளும் எடுத்துக் காட்டுக்களும் அதன்பின் அமைந்து, விரும்பும் முடிவுரையோடு அவ்வதிகாரங்கள் இயன்று செல்லும்.

வாழ்க்கையில் நேர்க் காட்சியிற்படும் பொருள்களுக்கே இவ்வாறு தருக்கம் தேவைப்படுமானால், நேரிற் காணவியலாத கடவுட்பொருளை உறுதிப்படுத்தற்கு இத் தருக்க நெறி எவ்வளவு இன்றியமையாததென்பதை எண்ணிப் பார்மின்கள். அதனால், 'சிவஞான போதத்'தில் முதல் நூற்பாவிலேயே 'என்மனார் புலவர்' என்று சொலப்படுபவர், 'அளவை நூல் அறிந்தோர்', என்று சிவஞான யோகிகளால் உரைக்கப்பட்டனர்.

அடிகளார் தம் இளங் காலத்தில் 20-வது வயதிலேயே 'முதற்குறள் வாத நிராகரணம்' என்று ஒரு மறுப்பு நூல் எழுதினார்; கடைசி காலத்திலும் 'தலைமை உரைமேல் எழுந்த தடைகளுக்கு 'விடை' என்னும் மறுப்பு நூல் இயற்றினார். 'மாணிக்க வாசகர் வரலாறுங் காலமும்' என்னும் மாபெரும் மறுப்புநூலும் இயற்றப்பட்டது. இடைப்பட்ட காலங்களில் எல்லாம், இங்ஙனம் மறுப்பில் வெளிவந்த நூல்களே பெரும் பாலன.

தருக்க நெறியோடும் உண்மையோடும் மாறுபட்டோர்க்கு மறுப்பெழுதாமல் இருக்க இயலுமா? தாம் உண்மை என்று கருதுவது இன்னதென்பதைப் புலப்படுத்தாவிட்டால், வாழ்க்கைச் சிறப்பை யாரும் எய்துதல் இயலாது. மரபும் மாட்சிமைப் படாது. தமிழ் நூல்களின் தொண்டும் பிறவும் விளங்காமற் போம். உலகம் உண்மையில் ஒழுக வேண்டும் என்னும் திருவுள்ள இரக்கமே இதற்குக் காரணம்; புலமை நினைவுகள் நெடுக நிலைப்பன அல்ல; விளக்கங்களில் அடிபட்டுப்போம்.

'முதற் குறள் வாத நிராகரணத்'தில் 20-ஆம் ஆண்டாகிய அத்துணை இளமைக் காலத்தில், அடிகள் புலப்படுத்தியிருக்கும் மறுப்பழகுகள் எண்ணிப் பார்க்கத்தக்கன.

அடிகளின் இளமை யுணர்ச்சி மிக்க வீறு பெற்றது. இலக்கண நெறியை விடத் தருக்க நெறியே இளமை யுணர்ச்சிக்கு எழில் கூட்டும்.

பல்லாவரத்தில் ஒருகால் அடிகளாரின் மொழி நடையைப் பற்றிப் பேச்சு வந்தது. அப்போது என்னிடம் அவர்கள் தெரிவித்தது இது:

'இளமைக் காலங்களில் எனக்கிருந்த எழுச்சி, இலக்கண நெறியோடும் தருக்க நெறியோடும் இணையற்றதாய் இருந்தது. இளமை இயல்புக்கு அது உரியதுதான். இப்போதெல்லாம் எனது நடை பழுத்துக் கனிந்துவிட்டது; பெருந்தன்மையில் என்னுள்ளம் ஈடுபடுகிறது; 'இளமைக் காலத்தில் என்னைப் பார்ப்பவர் என் புலமைக்கு அஞ்சுவர். பழுத்துவிட்ட இக்காலத்தில் புலமை முன்னினும் மிகுதியேயாயினும், கனிந்த சாறுடையதேயாயினும், குழந்தை போல் என்னிடம் அனைவரும் குலாவுகின்றனர். முன்னையது ஆட்சி முறை, பின்னையது உதவும் இரக்க முறை', என்று அடிகளே தெரிவித்தார்கள். 'இலக்கண நெறி ஆராய்ச்சித் திறனை அதாவது சிந்தனைச் செல்வத்தைப் பெருக்குமாயினும், தருக்க நெறியே மறுப்பழகுக்கு ஏற்றதாய் இருக்கிறது' என்று அடிகள் விம்மிதமாய் அடிக்கடி கூறுவர்.

வாழ்க்கைத் தொடக்கத்தில் அடிகளார் தெளிந்திருந்த கருத்துக்கள் பெரிதும் வியப்பைத் தருகின்றன. ஏதுக்களும் எடுத்துக் காட்டுக்களும் அடிகளார் பேராற்றலைப் புலப்படுத்துகின்றன.

'முதற்குறள் வாத நிராகரணத்'தில் அடிகள் எடுத்துக் கொண்ட கருத்துக்கள் வருமாறு: அவர்கள் விளக்கிச் சென்ற ஏதுக்களும், காட்டிச் சென்ற எடுத்துக் காட்டுக்களும், மறுப்

பழகுகளும் இங்கே சிறிது காணலாம். ஒரு சோறுதான் பதம் என்பதற்கேற்பச், சிலவே இங்கு எடுத்துக் காட்டப்படும்

1. வேதம் கூறும் 'வேதாந்தம்' மாயாவாதமன்று; 'ஆகமாந்தம்' என்னும் சித்தாந்தத்தின் முன் நிலை; 'வேதாந்த சித்தாந்தம்' இரண்டும் ஒன்று நெறியும் மற்றொன்று துறையுமாய் முழுமுதல்வன் கோட்பாடு உடையவர்க்கே உரியவை;

2. கல்வி கற்கும்போது உய்த்துணர்ந்து கற்க வேண்டும்.

3. தமிழ்மொழி தனி மொழி; உலக வழக்கம் உடையது; முத்தமிழ்ப் பாகுபாடும் அமைந்தது; மிகப் பழமையானது; இயற்கை நலம் சிறந்தது.

4. பிற மொழிகள், தமிழ் மொழியோடு ஒத்த இலக்கண நிலை, ஒலி முறை, வழக்குப் பயிற்சி முதலியன உடையனவல்ல.

5. மலையாளத்தை விடக் கன்னடமும், கன்னடத்தை விடத் துளுவமும், துளுவத்தை விடத் தெலுங்கும், மொழி வகையில் ஒன்றுக்கொன்று மேம்பட்டவை.

6. காரணங்களில், முதற் காரணம் என்பது, அதன் காரியத்தோடு ஒற்றித்து நிற்கும்; துணைக் காரணம், காரியப் படும் வரையில் ஒற்றித்து நிற்கும்.

7. மொழிக்கு அகரம் முதற் காரணமன்று; நிமித்த காரணமாய் எல்லா எழுத்துக்களோடும் கலந்து இயக்கும். அகரத்துக்கு முன் நிகழ்வது 'நாதம்' எனப்படும். வாய் அங்காந்த அளவில் அகரம் தோன்றுதலின், மற்ற எழுத்துக்களை விட அகரத்துக்கு நாதத்தோடு தொடர்பு மிகுதி; அங்காப்பு நிலையில் துண்டு பட்டது, அகரமாகும்; எழுத்துக்களெல்லாம் நாத காரியங்களேயன்றி அகரத்தின் காரியங்களல்ல. மற்ற எழுத்துக்கள் உருவாவதற்கு முன் அகரம் தோன்றுதலால், அது வாயில் போல உதவுகிறது.

8. சுட்டுக்கள் தமக்கு முன் வந்தவற்றைக் குறிக்கும்; இது வழக்கு; "இயற்பெயர்க் கிளவியும்" என்னும் தொல்காப்பியத்தானும் (521) விளங்கும்.

9. திருக்குறளில், 'பொருளல்லவற்றை' என்று வந்தமை, 'பொருள்கள் நிலையா' என்பது பற்றி.

10. தமிழ்மொழி, வீட்டு நெறி பயக்கும் சிறப்புடையது;

11. 'அத்துவிதம்' என்னும் சொல் 'சித்தாந்த சைவர்' போன்றவர்க்கே உரியது. கடவுள், அம்மையோடு (தன் ஆற்றலோடு-தன் சத்தியோடு) ஒன்றுபட்டு நிற்றலை, அதாவது

இரண்டற நிற்றலைக் குறிப்பதற்கே, ஞான நூல்கள் 'அத்து விதம்' என்ற சொல்லை வழங்கின. மெய்கண்ட தேவர்க்கு முன், பேருரைகாரரெல்லாம் இச் சொல் பற்றி ஐயுற்றிருந்தனர்; மெய்கண்ட தேவர் ஒருவரே, எல்லார்க்கும் விளங்கும்படி மெய்ப் பொருள் (அன்மைப் பொருள்) கூறினர். மாயாவாதிகள் அஃகிய அகன்ற அறிவுடைய ரல்லர்; 'சூனிய வாதி' 'நாத்திக வாதி' என்னும் பெயர்களும் அவர்களுக்குப் பொருந்தும்.

இக் கருத்துக்களெல்லாம் அடிகள் தமது 20-வது வயதுக் குள்ளாகவே ஆழக் கற்று உண்மை தெளிந்திருந்தனர்; மறுக் கவும் வல்லராய் விளங்கினர்!

மறுப்பதற்கு 'ஒருதலை துணி'யும் புலமைச் சிறப்பு இன்றி யமையாதது; புலவர்க்குரிய எழுவகைக் கொள்கைகளில், இது புலவர்க்கு அடையாளமா யிருப்பது; அடிகளே அதனை இந் நூலில் விளக்குகின்றார்.

மொழிக்கு எழுத்து என்பது காரண ஆகுபெயரா, சினை ஆகு பெயரா என்று அறிஞரிடையே சிக்கல் தோன்றுகிறது. இது போன்ற நிலைகளில், 'சிறப்பியல்பு எது' என்பதைக் கண்டு 'ஒரு தலை துணிதலால்' சிக்கல் நீங்கும்; இதனால் மேற்கொண்ட கருத்தை வலியுறுத்தக் காரணமும் காட்டியபடியாகும். அதன் பின், எடுத்துக்காட்டுக்களில் இது தெளிவிக்கப்பட வேண்டும். 'பொன்னாலான குடம்' ஓர் எடுத்துக் காட்டாகும். காரியப் பொருளாகிய குடத்தோடு பொன் வேறுபடாமல் ஒற்றித்து நிற்கிறது. அப்படியே மொழியாகிய காரியப் பொருளிலும் எழுத்து வேறுபடாமல் ஒற்றித்து நிற்கும். இங்ஙனங் கூறுவ தாயின் குடத்துக்குப் பொன்னும் மொழிக்கு எழுத்தும் 'காரண ஆகுபெயர்' என்பது பொருந்தும். ஆனால், பொன்னாலான குடத்திலிருந்து அப் பொன்னே வேறு பட நிற்கவில்லை; எழுத்து, மொழியாக நிற்கும்போது, மொழியில் வேறு படாமல் நிற்பதோடு அதே எழுத்துத் தனித்தும் நிற்கும்; 'அழகு' என்னும் சொல்லின் 'அ' என்னும் எழுத்து இயைந்து நிற்கிறது; அதே அகரம் 'அருமை' என்னும் வேறொரு சொல்லிலும் தொடர்புற்று நிற்கிறது; அவ்வெழுத்தே 'அன்பு', 'அறம்' முதலிய வேறு பிற சொற்களையும் தோற்று விக்கும்; இவையெல்லாம் வேறு வேறு அகரங்களல்ல. 'அ' என்னும் எழுத்து ஒன்றை வரிப்பாடத்தில் தனியாகவும் நிற்கக் காண்கிறோம். இந்நிலைமையைத்தான் 'சினைத்தன்மை' என்பது. எழுத்துக்கள் இச் சிறப்புடையனவாதலால், மொழிக்குக் 'காரணம்' என்பதைவிடச் 'சினை' சிறந்ததென்பது

மாட்சி; அகரத்தைச் 'சினையாகு பெயர்' என்பது, காரண ஆகு பெயர் என்பதை விட இதனால் மிகச் சிறப்புடையதாகும்.

'எழுத்தால் மொழி அமைகிறது' என்பது மேற்கோள்; 'காரண காரியத்திலும் ஒற்றித்து நிற்பதோடு வேறாகவும் நிற்கிறது' என்பது ஏது; 'பொன்னாலான குடம்' என்பது, இரு வகை நிலைகளையும் விளக்குவதற்கு ஏற்ற எடுத்துக் காட்டு.

'நெற்பொலி' 'மலர் மாலை' என்பன 'சினையாகு பெயர்' என்பதற்கு மட்டும் ஏற்றவை; 'பொற்குடம்' என்பது, 'காரண ஆகு பெயர்க்கும்' பொருந்தும்; ஏனென்றால், குடமாகவே பொன் திரிந்து விடுகிறது.

அதோடு 'காரண ஆகுபெயர்' 'சினையாகு பெயர்' என்னும் இரண்டுக்கும், கூடப் பொருந்துகிறது; எழுத்து மொழியாய்த் திரிந்து விடுவதோடு வேறாகவும் தனியே நிற்பதைக் காண்கிறோம்; இரண்டிலும் ஒன்று பொது; மற்றொன்று சிறப்பு; சிறப்பியல்பை எடுத்துச் 'சினையாகு பெயர்' என்று ஒரு தலை துணிவது புலமைச் சிறப்பாயிற்று! கருத்துக்களை ஒரு தலை துணியும் வல்லமையின்றி, இப்படியும் இருக்கலாம் அப்படியும் இருக்கலாம் என்று மழுப்புவது அடிகளார்க்குப் பிடிக்காது. வழ வழப்பின்றித் தெரிப்பாக இருப்பதே அடிகள் இயல்பு!

மொழிக்கு உறுப்புப்போல் எழுத்துக்கள் பயன்படுதலைச் 'சினைத் தன்மை' என்ப; மேற்காட்டிய எடுத்துக் காட்டுக்கள், உலகியற் பொருள்கள்! உரையளவை என்பதற்கு இவற்றோடு நூற்குறிப்பும் வேண்டுமாதலின், அதனையும் அடிகளார் எடுத்துக் காட்டுகின்றார்; ''பிண்டப் பெயரும் ஆயியல் திரியா'' என்னும் தொல்காப்பிய நூற்பாவின் (574) உரைக்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'சொல்லுக்கு எழுத்து அவயவம்' என்கின்றார் என்பதை அடிகள் எடுத்துக் காட்டுதல் காண்க.

இங்ஙனமே ஆகுபெயரா, அன்மொழித் தொகையா என்று ஒன்றை ஒருதலை துணிய வேண்டிய சிக்கலும் அடிகளின் இளமைக் காலத்தில் எழுந்தது! திருமயிலை சண்முகம் பிள்ளை, சோழவந்தான் சண்முகம் பிள்ளை முதலிய பெரும் புலவர்களும் இதில ஈடுபட்டு மாறி மாறி மறுத்துக் கொண்டனர். புலவர் மாறுகோளில் ஒருதலை துணிய கட்டாயம் அவர்களிடையே தென்படவில்லை; அடிகளார் தலையிட்டு ஒருதலை துணிந்து அனைவர்க்கும் வழிகாட்டினார்.

'கனங்குழை' என்பது அடையடுத்த ஆகுபெயர் என்பாரும் அன்மொழித்தொகை என்பாருமாக இருபிரிவினர் போராடினர்; திருக்குறள் இன்பப்பாலின் முதற் குறளாகிய,

"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலும்என் நெஞ்சு"

என்பதில் இச்சொல் வருகின்றது; உரையாசிரியர் பரிமேலழகர், தமது விளக்கத்தில் 'கனங்குழை' ஆகுபெயர் என்றே குறித்தார்; புலவரிற் சிலர் இதனை 'அடையடுத்த ஆகுபெயர்' என்றனர். ஆசிரியர் மறைமலையடிகளார், 'ஆகுபெயர்' என்பது தான், பரிமேலழகர் கருத்துப்படி, முன்னோர் வழக்கு; 'அடையடுத்த ஆகுபெயர்' என்ற ஒன்று தொல்லாசிரியர்க்கு உடன்பாடன்று என்று துணிந்தார். சிலர் அன்மொழித்தொகை என்றனர்.

ஆகுபெயர்க்கும் அன்மொழித் தொகைக்கும் வேறுபாடு காணும் எழுச்சி பெரிதாய் எழுந்தது; சொற்களின் பொருள்களை நுனித்துணரும் சொற்பொருட் சிறப்பில், இக் கருத்து வேறுபாட்டுக்கே இடமில்லை; 'கனம்குழை' என்னும் இரு சொற்களில், 'குழை' என்பது மட்டும் அதனை யுடைய பெண்ணுக்கு ஆகி வருகிறது; 'குழை' என்னும் அச் சொல்லைக் 'கனம்' என்பது அடைமொழியாக அடுத்து நின்று அதன் பளுவை உணர்த்துகின்றது; குழை என்னும் சொல்லைப்போல் பெண்ணை உணர்த்தவில்லை; பெண்ணுக்காக ஆகி வந்தது குழையே யன்றிக் கனம் அன்று; ஆதலால் பரிமேலழகர் இதனை ஆகுபெயரென்று உரைத்தார்.

அஃதொக்கும், 'கனம்' என்பது குழைக்கு அடைமொழியாய் வந்தமையால் 'கனங்குழை' என்பதை 'அடையடுத்த ஆகுபெயர் என்றால் என்ன?' என்று சிலர் கருதினர்; அப்படிச் சொல்லுவதா யிருந்தால் உரையாசிரியர் பரிமேலழகரே அவ்வாறு உரைத்திருப்பார்; அவரைப் போலவே பழைய ஆசிரியர்கள் யாரும் 'அடையடுத்த ஆகுபெயர்' என்று ஆகுபெயரில் ஒரு பிரிவைக் கொள்ளவில்லை; தொல்காப்பியருங் கொள்ளவில்லை; தமிழ்க்குள்ள சிறப்பே சுருங்கலழகில் உள்ளது; இலக்கண விதிகளை எவ்வளவு சுருக்கமாகக் கையாளுகிறோமோ அவ்வளவும் தமிழ்க்கு அழகு செய்யும்; ஆகுபெயரில் 'இருமடியாகுபெயர்' எனவும் 'மும்மடி யாகுபெயர்' எனவும் பின்வந்தோர் விரித்துப் பெருக்கிக் கொள்வதுபோல் 'அடையடுத்த ஆகுபெயர்' என்பதும் அங்ஙனம் எழுந்ததாகும்; இலக்கண விதிகளைப் பெருக்கப் பெருக்க, அது சமக்கிருதம் முதலிய ஏனைய மொழிகளைப் போல வழக்கு வீழும்; அதனால் தொல்லாசிரியரெல்லாரும் இங்ஙனமொன்று கொண்டாரல்லர். பரிமேலழகரைப் போல் தொல்லாணை நல்லாசிரியரைப் பின்பற்றுதலே நமக்குக் கடமை என்பது அடிகளார் கருத்து.

இனி 'அன்மொழித் தொகை' என்னும் சொல்லின் பொருள் கருதுவோம்; 'தொகை' என்னுங் குறிப்பால், அது இரு சொற்களாகவே வரவேண்டும் என்று தெரிகிறது; ஆகு பெயர்க்கு ஒரு சொல்லே முக்கியம்; இரு சொல் வந்தால் அவற்றில் முன் சொல் மற்றொரு பின் சொல்லைச் சிறப்பிக்கும் அடைமொழியாய் வரலாம்; அவற்றிற் பின்சொல் மட்டுமே வேறொரு பொருளுக்கு ஆகிவரும் ஆகுபெயராகும்; 'அன் மொழித் தொகை' அங்ஙனமன்று. இருசொற் பொருள்களும் அல்லாத பொருளை (அல்மொழி) அவ்விரு சொற்களுமே உணர்த்தும். அதனைக் குறிப்பிடும் பொருட்டே இரு சொற் களின் இடையில் தொகுப்புண்டு மறைந்திருப்பதாகத் 'தொகை' என்னும் சொல் சேர்ந்து 'அன்மொழித் தொகை' எனப்பட்டது.

மேலும், ஆகுபெயருக்கு 'இயைபு' முக்கியம். இயை புடைய பொருளுக்கே அது ஆகிவரும்; அன்மொழித்தொகைக்கு இயைபு முக்கியம் அன்று; இயைபில்லாத வேறொரு பொருளி லும் வரும். அன்மொழித் தொகையாகக் கூறவிரும்பும் புலவர், தம் கருத்துப்படி வேறொரு பொருள் அமையுமாறு இரு சொற் களை அமைப்பார். இவ்வாறு ஒருதலை துணிதல் முதன்மை யாயிற்று. ஆசிரியர் மறைமலையடிகள் இங்ஙனம் இலக்கண முறைப்படியும், தருக்க முறைப்படியும் ஒருதலை துணிந்து நலம் பெருக்குவர்.

இங்ஙனமெல்லாம் அடிகளார் மறுப்பு நூலில், முறை தழுவி வருவது 'மறுப்பழகு'களாகும். மொழிக்கு எழுத்து, 'காரண ஆகுபெயரா' 'சினையாகு பெயரா' என்னும் சிக்கலை ஒரு தலையாகத் துணியாவிட்டால், கருத்து வேறுபடுவோரை மறுத்தல் இயலாது; புலமையும் வீறு பெறாது; இலக்கண அமைதி மேம்படாது; தருக்க நெறியும் சிறக்காது.

மற்றொரு வகையான மறுப்பழகும் இங்கே எண்ணிப் பார்க்கலாம்; கருத்துப் போக்குக் கேற்ப, மறுக்கும் முறைகளை மேற்கொள்வது ஓர் அழகியல்! அறிவு நூல்களில் 'கூடத்தன்' என்று ஒரு சொல், வழங்கப்படும். உலக நிலையில் 'சீவன்' என்றும், விடுதலை நிலையில் 'கூடத்தன்' என்றும் இரண்டு நிலை களிலும் உயிர்களே குறிக்கப்படுகின்றன; இதனை மாயா வாதிகள் ஒப்புக்கொள்வதில்லை. உடம்போடு கூடிய நிலையில் உயிர்கள், பற்றுடன் இருத்தலால் 'சீவன்' என்றும், பற்றற்று நிற்கும்போது 'கூடத்தன்' என்றும் பெயர் பெறும். கருவிக ளோடு கூடி உயிர்வாழ்வதனுல் அப்படிச் சீவிக்கும் உயிர்க்குச்

'சீவன்' எனப் பெயர் அமைந்தது; விடுதலையான நிலையில் புளியம்பழத்தின் ஒடு போல வெறுங் கூட்டில், பற்றின்றி உலவுதலால் 'கூடத்தன்' என்று அவை சொல்லப்படுகின்றன. இவ் வேறுபாடுகளை யறியாமல், 'பிரம்ம'மே 'சீவ'னுகவும் 'கூடத்த'னுகவும் ஆகின்றன என்று சொல்லுகின்ற வாதம், தம் கொள்கையை நிறுவ வேண்டுமென்னுங் கருத்தால், 'கொஞ்சுகின்ற இளஞ் சொல்'லாகும், பொருளற்ற மழலை மொழியாகும்; 'கொஞ்சுதல்' என்பதனல் தமது கொள்கைமேல் வைத்த பற்றுப் புலப்படும்; அதோடு, அந் நிகழ்ச்சி பெரும்பாலும், தாய்மாருடையது; அதுபோல, அறியா மழலைகள் பேசும் உள்ளீடற்ற மாணவருக்குத், தாம் ஆசிரியராய் இருந்து, உரமற்ற மொழி பகர்தலையும் அது காட்டியது. அத்தகைய கொஞ்சும் வார்த்தைகளுக்குக் கனம் (பெருமை) ஏது? என்பது அடிகளார் முடித்து மறுக்கும் மறுப்பு! கருத்துக் கேற்றபடி இங்ஙனம் முடிக்குஞ் சொல் பெய்து, உயர்ச்சி மிகுப்பது, ஒரு மறுப்பழகு மாட்சி. இவ்வாறு வருவன ஒன்றிரண்டல்ல, பல!

திருவள்ளுவர், தமது திருமறையில்,

"உயிர்ப்ப உளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்"

என்றொரு பொய்யா மொழியை அருள் செய்வார்; தம்மை மறுப்பவரைத் தாம் அவர் வலி கெடுக்காமல், எவரும் விட்டு வைத்தலாகாது; அவர்க்குமேல், தமது வலியைக் காட்டி அவர் தருக்கை ஒழித்தல் வேண்டும்;

"இன்னு செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு" எனவும் திருவள்ளுவரே அருளுவராதலின், 'இனியவே செய்தால் என்ன?' என்று மயங்குவாரும் உண்டு; குருதலத்தில் கண்ணபிரான் அருச்சுனற்கு அருளிய கீதை மொழியும் இங்கு நினைவுக்கு வரும்; 'இனியவை செய்ய வேண்டாம், கொடுமையே செய்க; செய்து, செயிர்ப்பவர் செம்மல் சிதைக்க வேண்டும்' என்று திருவள்ளுவர் சொல்லவில்லையே; பயன்படுமென்ருல், இனியவே செய்து அவர் செம்மலைச் சிதைக்கலாம்; செம்மல் சிதைப்பதே இங்கு முதன்மை;

பயன்படாதென்ருல், பயன்படு முறையாகக் கொடுமை செய்தல் சால்பாகுமா? என்றும் சிலர் எண்ணக் கூடும். பயன்படும், பயன்படாதென்பது, செய்யும் செயலால்மட்டும் விளைவதன்று; செய்வாரது உள்ளத்தின் ஈர நிலைமையும் பொறுத்தது; "இனியவர் என் சொலினும் இன்சொல்லே" என்பது இங்கு

நினைக்கத் தக்கது; ஈர நெஞ்சம் மறம் செய்யாது; நலமே செய்து உய்விக்கும்;

தம் தலைமை கெடாமலே, தம் தலைமைக்கு ஊறுவிளைக்கும் பிறர் கருத்தையும் அதனால் அமையும் போலித் தலைமையையும் கெடுத்தல் இன்றியமையாதது; உண்மைத் தலைவராயிருந்தால்; யாரும் அவர்க்குப் பணிந்து போதலே தக்கது! வெற்றுச் செருக்கு மட்டுமே இங்குக் கூறப்பட்டது; அச் செருக்குடை யாரைக் கெடுத்தொழிக்கக் கூறவில்லை; செருக்கை மட்டும் அழிப்பதற்கு அதற்கேற்ற இனிமை வலிமைகளைக் காட்டுதலே ஒக்கும். செய்திறத்தால் அதனைக் காட்டுவதானால் பயன்படும்; செய்முறை வேறுபட்டால் மட்டுமே பயன் குலையும்;

அடிகளார், மறுத்தார் என்னுமல், மறுப்பில் அழகு செய்தார் எனத் தலைப்பமைந்தமை இவ்வினிமைச் செய் திறனையே புலப்படுத்தும். உண்மையிற் கருத்து வேறுபட்டோர், குழறு படை செய்வது போல் தாமும் குழறுமல், உரிய இலக்கண தருக்க முறைகளைப் பின்பற்றினால், செம்மல் சிதைந்துபோம்; அல்லது அவரவர் பக்குவத்திற்கேற்பப் பொறுத்துக் காலமுண்டாகத் தானே கெடுமாறு காண்டலும் போதும்.

'சோமசுந்தரக் காஞ்சியாக்கம்' என்பது ஒரு மறுப்பு நூல்; அதனை எழுதும்போது அடிகளுக்கு வயது 25 க்கு மேல் இராது.

இம் மறுப்பு, மறுப்புக்கு மறுப்பாகும். தலையாலங்கானத்து நெடுஞ்செழியனை மன்னர் பலரும் குறுநில மன்னரும் எளியன் என்று எதிர்த்தனர். அப்போது நெடுஞ்செழியன் மிக இளைஞன்; ஆயினும் அவன் உணர்வு மிகுந்தவனாய் அனைவரையும் முறியடித்து வென்றனன். அவ்வாறு அடிகளார் இளமையாயிருக்கிறார்களென்று 'சோமசுந்தரக் காஞ்சிக்'குச் சென்னையில் புலவர் சிலர் ஒருங்கு சேர்ந்து, கரவுப் பெயரால் மறுப்பெழுதினர். மறைமலை யடிகளாரா விடுபவர்.

இப் பகுதி (ஆன்ந்தக் குற்றம்) யாமெழுதத் தொடங்கிய காலத்துச் சோமசுந்தரக் காஞ்சியின்மேன் மறுப்பெழுதினார், திருமயிலை திரு. சண்முகம் பிள்ளை யெனச் சிலரும், திரு. நா. கதிரைவேற் பிள்ளையென ஒரு சிலரும், திரு. வைத்தியலிங்கம் பிள்ளை யென வேறு சிலரும், அற்றன்று இம் மூவருமே ஒருங்கு சேர்ந்தெழுதினாரென மற்றுஞ் சிலருந் தெரிவித்தனர். அப்போலி மறுப்புக் கரவு பெயர் நிறுத்தி எழுதப்பட்டமையி னஃதெழுதினாரின்னாரென ஒரு தலையாற் றுணியப்படவில்லை. சிவபெருமான் திருவருள் வழிநின் றொழுகாது தற்பெருமையா னறிவு மருண்டு செருக்கிப் பொறாமைகொண்டு திரிகுவார் யாராயினு மென்?

திருவருட் பெருந்துணை கொண்டொழுகும் யாம் அவரையு மவர் போலி மறுப்பினையும் ஒருபொருட் படுத்துவா மல்லமென் றெழிக.'

இலக்கண இலக்கியத் தருக்க அமைப்புகளில் புலமை மிக ஊறிச் 'சோமசுந்தரக் காஞ்சி ஆக்கம்' என்ற சிறந்த மறுப்பைத் தெளித்தெடுத்து அடிகள் எழுதினர். பொருளிலக்கணக் குறிப்புக்கள் பலவும் அதில் வருகின்றன. அடிகளாருடைய புலமை நுட்பமும் வீறும் உயர்வும் அதில் நன்றாய்த் தெரிகின்றன. 'கையறுநிலை' 'மன்னைக் காஞ்சி' 'ஆனந்தக் குற்றம்' போன்ற பல நுட்பங்கள் தெளிவாக எடுத்துக் காட்டப்படுகின்றன. தமிழ் பயிலும் மாணவர்க்குப் பயன்படும்படி கருத்துக்களை மிக அழகாக அதில் அடிகள் விளக்கியுள்ளார்.

இம் மேன்மைகளான் அடிகளாரின் மறுப்பெழுதும் மாட்சி இனிது விளங்கும். மறுப்பார்க்கு மட்டுமன்றி மற்றவர்க்கும் நிலையாய் அவை பயன்படும். மறுக்கும் அழகில் ஈதும் ஒன்று.

கோள்நூல் ஆய்வுக்கு இளமையுடையாரும் மருத்து நூல் ஆய்வுக்கு முதுமையுடையாரும் ஏற்றவர் என்பது ஒரு வழக்கு; அதுபோல மறுப்புக்கு இளமையும் ஆய்வுக்கு முதுமையும் ஏற்றவை யாகும்; மறுப்புக்கு இங்கே எடுத்துக் காட்டப் பட்டவை, அதனால், அடிகளின் இளம்பருவ நூல்கள் மற்றவற்றிலும் மறுப்புக்கள் உண்டு. மேலும், அடிகளாரின் இளம் பருவ வீறு நன்கு தெரியும் பொருட்டும், மிக இளமையிலேயே முற்பிறவியின் நலத்தால் அவர்கள் பெற்றிருந்த அருமையான புலமைச் சிறப்புக்கள் விளங்கும் பொருட்டும் இங்கே சில எடுத்துக் காட்டப்பட்டன. இவ்வாறே ஒவ்வொரு நூலும்.

---

## வடமொழிக்கண் தமிழ்ச் சொற்கள் செல்லுமாறு

வடசொற்கள் தமிழில் வழங்குவதற்கான நெறிமுறைகளைத் தமிழிலக்கணங்கள் கூறுவதுபோலவே தமிழ்ச் சொற்கள் சமஸ்கிருதத்தில் வழங்குவதற்கான நெறிமுறைகளை, கி. பி. 8ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த குமாரிலபட்டர் தம்முடைய "தந்திர வார்த்திகம்" என்னும் நூலில், பின்வருமாறு கூறுகிறார் :

"ஆரியவர்த்தத்தில் வாழும் ஆரியர்க்குத் தெரியாதனவாயும் மிலேச்சருக்குத் தெரிந்தனவாயுமுள்ள சொற்கள் சமற்கிருதத்தில் வழங்கத்தக்கனவாகும். அவற்றை,

"Cor - சோறு; Pamp - பாம்பு; Vair - வயிறு; Nader - நடை (இடைகழி): al - ஆள்" என மாறி வழங்கலாம்.

இதனைக் கன்னட அகர முதலியின் முன்னுரையில் (பக். 28) கிட்டல் பாதிரியார் எடுத்துக் காட்டியுள்ளார். வடபாடைக்கண் தமிழ் செல்லாது என்ற சேனவரையர் இதனை அறியாரானர்.

**இரா. மதிவாணன்**

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

முல்[4] பொருந்தற் கருத்து வேர்ச்சொல் (தொடர்ச்சி)

மா—மாத்திரம் = 1. (முந்தின பரலைப் பார்க்க) 2. மட்டும். வால் மாத்திரம் நுழையவில்லை. (உ. வ.). 3. தனிமை. (சங். அக.).

மட்டும், தனிமை என்னும் இரு பொருட்கும் அடிப்படை அளவு என்னும் பொருளே.

சென்னைப் ப. க. க. த. அகரமுதலி அளவைக் குறிக்கும் மாத்திரம் என்னும் சொல்லை வேருகப் பிரித்துக் கூறியுள்ளது.

ஒ. நோ : மட்டு = அளவு; மட்டும் = மாத்திரம், தனிமையாய்.

மாத்திரம்—வ. மாத்ர.

மாத்திரத்தில் = அளவில், உடனே. அதைக் கேட்ட மாத்திரத்திற் கொடுத்துவிட்டான். (உ. வ.).

மாத்திரம்—மாத்திரை = 1. அளவு. ''மாத்திரையின்றி நடக்குமேல்'' (நாலடி. 242). 2. நொடிப் பொழுதான கால அளவு. ''கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை'' (தொல். எழுத். 6). ''சக மூன்றுமோர் மாத்திரை பார்க்கு மெங்கள் கண்ணவனுர்'' (திருநூற். 25). 3. செய்யுள் உறுப்புக்களுள் ஒன்று (எழுத்தொலி யளவு). ''மாத்திரை யெழுத்தியல் அசை வகை எனுஅ......நல்லிசைப் புலவர் செய்யுளுறுப்பென...... வகுத்துரைத் தனரே'' (தொல் செய். 1). 4. ஒரு மாத்திரை யொலிக்குங் குற்றெழுத்து. (யாழ். அக.). 5. கால விரைவு. (பிங்.). 6. மிகச் சுருக்கமான இடம். ''அரை மாத்திரையி லடங்குமடி'' (தேவா. 970 : 7). 7. அளவாகச் செய்யப்படும் மருந்துக் குளிகை. (அரு. நி.). 8. முரல் (இசைச்சுரப்) பகுதி (திவா.). 9. காதணி வகை. ''செம்பொன் மாத்திரை செரீஇய காதினர்'' (பெருங். மகத. 17 : 157).

மாத்திரைக் கோல் = அளவு கோல். ''மாங்காய் விழ வெறிந்த மாத்திரைக்கோ லொக்குமே'' (நல்வழி. 4). 2. இறும்பர் (சித்தர்) கையிற்கொள்ளும் வரையிட்ட மந்திரக் கோல். ''விளங்கு செங்கையின் மாத்திரைக் கோலும்'' (திருவாலவா. 13 : 4). 3. மந்திரக்காரன் கைக்கோல். (W.).

மாத்திரைச் சுருக்கம், மாத்திரைப் பெருக்கம் என்பன சொல்லணி வகைகள். சுருக்கம், பெருக்கம் என்பவற்றைச் சுதகம், வருத்தனம் என்னும் வடசொல்லாற் குறிப்பர்.

முத்தமிழிலக்கணமும் இறும்ப (சித்த) மருத்துவமும், ஆரியர் வருகைக்கு முற்பட்டன என்பதை அறிதல் வேண்டும்.

மாத்திரை—வ. மாத்ரா.

பல பொருள்கள் ஒன்றுசேர்வதால், குழம்பலும் குழப்பமும் கலக்கமும் மயக்கமும் உண்டாகும். நீரும் மண்ணும் சேரின் கலங்கல் அல்லது கலுழியெனப்படுவதும், நீரும் பிற பொருளும் சேர்ந்து திண்ணமாயின் குழம்பு அல்லது குழம்பல் எனப் படுவதும், பகலும் இரவும் மயங்கும் (கலக்கும்) வேளை மசங்கல் (மயங்கல்) எனப்படுவதும், காண்க.

ஒ. நோ: கல—கலகு—கலங்கு—கலக்கு—கலக்கம். ஒரு கவர்த்த வழியைக் காணின் எது வழியென்று தெரியாது கலங்க வும், அறியாதார் பலர் கூடியிருக்கக் காணின் அவருட் காண வேண்டியவர் யாரென்று தெரியாது மயங்கவும், நேரும். இதனால், பொருட்கலக்கம் மனக் கலக்கத்திற்கும், ஏதுவாம்.

அமைதியான மனத்தில் கவலை அல்லது அச்சம் கலப்பின் மனக்கலக்கம் உண்டாகும். மனத் தெளிவு முற்றும் நீங்குவதே மயக்கம். அது தீய பொருள் உடம்பிற் கலப்பதாலும் உண் டாகும்.

மல்—மலை. மலைதல்=மயங்குதல். "வேறு வேறு எடுத்துக் காட்டுதல் பற்றி மலையற்க" (சி. போ. பா. 6 : 2, பக். 146).

மலைத்தல்=மயங்குதல். சிறுவன் விடுதிப் பள்ளிக்கு வெளியூர் சென்றபோது, வீட்டை நினைத்து வழியில் மலைத்து மலைத்து நின்றான்.

மல்—மல—மலகு—மலங்கு. மலங்குதல்=1. நீர் முதலியன குழம்புதல். "மலங்கிவன் றிரைபெயர்ந்து" (தேவா. 130 : 9). 2. கண் கலங்குதல். "நெடுங்கண் புகுவன்கண் மலங்க" (சீவக. 1067). 3. கண்ணீர் ததும்புதல். "கண்ணினீர் மலங்கும் பொலந்தொடி" (தஞ்சைவா. 243). ஒ. நோ: கலுழி=கண்ணீர். 4. மனங்கலங்குதல். "ஒன்பது வாயிற் குடிலை மலங்க" (திரு வாச. 1 : 55). 5. கெடுதல். "கதிர்வேன் மலங்க" (சீவக. 1613).

மலங்கு—மலக்கு. மலக்குதல்=கலக்குதல். "மலக்கு நாவுடையேற்கு" (திருவாய். 6 : 4 : 9).

மலக்கு=மயக்கம்.

மலக்கு—மலக்கம்=1. மாறு. நவரத்தினங்களாற் கட்டி இடை நிலங்களை......பொற்றகட்டாலே செறிய மலக்கமாகக் கட்டி'' (சிலப். 3 : 117, உரை). 2. மனக்கலக்கம். ''மலக்க மற்ற நம்மல்லமன்'' (பிரபுலிங். வசவண்ணர். 5). 3. துன்பம். ''உற்ற மலக்க முண்டாகினுக'' (கம்பரா. இராவணன்களங். 18).

மலங்கு=பாம்பென்று மயங்குதற் கிடமான விலாங்குமீன்.

மலங்கு—மலங்கல்=விலாங்குமீன்.

மலங்கு—(மலாங்கு)—விலாங்கு.

மல்—மால். மாலுதல்=1. பொருந்துதல், ஒத்தல். 2. மயங்குதல். ''மான்று வேட்டெழுந்த செஞ்செவியெருவை'' (அகம். 3).

மால்=1. மயக்கம். ''புரோம் பழகுடன் மாலங் குடைய மலிவன மறுகி'' (குறிஞ்சிப். 96). 2. மயக்கும் ஆசை. ''என் பேய்மனமால் கொண்டதே'' (திருநூற். 1). 3. ஆசை வகைகளுள் கடுமையான காமம். ''மடப்பிடி கண்டு வயக்கரி மாலுற்று'' (பரிபா. 10 : 42). 4. இடம் பொருள் தெரியா வண்ணம் கண்ணை மயக்கும் இருட்டு. 5. இருள் நிறமான கருமை. ''மால்கடல்'' (பெரும்பாண். 487). 6. கருநிறமான திருமால். ''நீர்செல நிமிர்ந்த மாஅல் போல'' (முல்லைப். 3). 7. கருமுகில். ''சிலைமா லுருமு'' (தஞ்சை. 164). 8. ஆரிய முத்திருமேனிக் கொள்கைப்படி காவல் தொழிலால் திருமாலை யொத்தவனுன மாலியச் சோழன். (பிங்.).

ஒ. நோ : Gk. *melas*, black.

இருளைக் குறிக்கும் dark என்னும் ஆங்கிலச் சொல், கருமை, அறியாமை என்னும் பொருள்களையுங் குறித்தல் காண்க.

மால் — மாலை = 1. தொடுக்கப்பட்டது, வரிசையாகப் பொருந்தியது. 2. தொடுத்த பூந்தொடை. ''மாலைபோற் றூங்குஞ் சினை'' (கலித். 106 : 27). 3. மலர் மாலைபோல் தொடுத்த அல்லது கட்டிய மணிமாலை அல்லது முத்துமாலை. 4. பூமாலை போன்ற பாமாலை. எ-டு: திருவேகம்ப மாலை, திருவரங்கத்து மாலை. 5. வரிசை. ''மாலை வண்டினம்'' (சீவக. 2397). ''மாலை மாற்றே'' (யாப். வி. பக். 493). 6. முத்துமாலை போன்ற வடிவம். மாலை மாலையாகக் கண்ணீரை வடித்தாள். (உ. வ.). 7. கயிறு. ''மாலையு மணியும்'' (பரிபா. 5 : 67). 8. மாலை போன்ற பெண். (திருக்கோ. 1, உரை, பக். 9.). 9. பாண்குடிப் பெண்ணுகிய விறலி. ''பாணர்

மாலையர் மாலை யெய்தி'' (திருவாலவா. 54 : 26). 10. மயக்கம், கலப்பு. 11. பகலும் இரவுங் கலக்கும் அந்திப் பொழுது. ''மாலை யுழக்குந் துயர்'' (குறள். 1135). 12. இரா. ''மாலையும் படா விழித்திரளது'' (தக்கயாகப். 155). 13. இருள். ''மாலை மென் கேசம்'' (திருப்பு. 32). 14. குற்றம். (தொல். சொல். 396, உரை). 15. பச்சைக்கற் குற்றம். (சிலப். 14 : 184, உரை).

பூமாலையையும் பொழுது மாலையையுங் குறிக்கும் மாலை யென்னுஞ் சொல் ஒன்றே. சென்னைப் ப. க. க. த. அகர முதலியில், அவ்விரண்டையுங் குறிக்குஞ் சொல் வெவ்வே றென்று காட்டப்பட்டுள்ளது. இது பூமாலையைக் குறிக்குஞ் சொல்லை, வடசொல்லென்று காட்ட வகுத்த சூழ்ச்சியே.

மாலை—வ. மாலா.

மாலை—மாலிகை = சிறுமாலை. 'கை' சிறுமைப் பொருட் பின்னொட்டு. ஒ. நோ : குடி = குடிகை (சிறு கோயில்).

மாலிகை—வ. மாலிகா. (மாலை). வடசொல் சிறுமைப் பொருளை இழந்து நிற்றல் காண்க.

மால்—மான். மான்றல் = 1. ஐயுறுதல். (திவா.). 2. மயங்குதல். (சூடா.).

மால்—மாலம் = 1. மயக்கு. 2. ஏமாற்று. 3. நடிப்பு.

மால்—மான்—வான் = 1. கருமை. 2. நீலவானம். ''வானுயர் தோற்றம்'' (குறள். 272). 3. தேவருலகு. ''வான் பொரு நெடுவரை'' (சிறுபாண். 128). 4. வீட்டுலகம். ''வானேற வழிதந்த'' (திவ். திருவாய். 10 : 6 : 5). 5. மூலக் கருப் பொருள். ''வானின்றிழிந்து வரம்பிகந்த மாபூதத்தின்'' (கம்பரா. அயோத். மந்திர. 1.). 6. கருமுகில். ''ஏறெருடு வான்ஞெமிர்ந்து'' (மதுரைக். 243). 7. மழை. ''வானின் றுலகம் வழங்கி வருதலால்'' (குறள். 11). 8. அமுதம். ''வான் சொட்டச் சொட்ட நின்றட்டும் வளர்மதி'' (தேவா. 586 : 1). ''வான்...தானமிழ்தம் என்றுணரற் பாற்று'' (குறள். 11). 9. நன்மை. ''வரியணி சுடர்வான் பொய்கை'' (பட்டினப். 38). 10. அழகு. ''வான்பொறி பரந்த புள்ளி வெள்ளையும்'' (கலித். 103).

ம. வானு.

மான்—மானம் = 1. கருமை. 2. நீலவானம். 3. கருமுகில். 4. மழை.

வானத்தை மானம் என்பதே கல்லா மாந்தர் உலக வழக்கு. கருமை என்னும் பொருளடிப்படையிலேயே, மானம் என்னும் சொல் குற்றப் பொருள் கொண்டதாகத் தெரிகின்றது. (முந்தின கட்டுரையில், ஒப்புமைப் பொருள் கொண்ட மானம் என்னும் சொல்லிற்குக் குற்ற அளவு என்று குறித்திருப்பதை, நீக்கிவிடுக).

வான்—வானம்=1. காயம் என்னும் நீலவானம். "வானத் தரவின் வாய்க்கோட் பட்டு" (கலித். 105). 2. தேவருலகு. "வான மூன்றிய மதலை போல" (பெரும்பாண். 346). 3. கரு முகில். "ஒல்லாது வானம் பெயல்" (குறள். 559). 4. மழை. "வானம் வாய்க்க மண்வளம் பெருகுக" (மணி. 19 : 149).

தெ. வான, க. பான. (b).

மல்—மர்—மரு. மருவுதல்=1. கலந்திருத்தல். "மருவார் சாயல்" (சீவக. 725). 2. தழுவுதல். "மருவுமின் மாண்டா ரறம்" (நாலடி. 36). 3. பயிலுதல். "பாத்தூண் மரீஇ யவனை" (குறள். 227). 4. வழக்கப்படுதல். "மரீஇய பண்பே" (தொல். பொ. 308). 5. புணர்தல். "வெம்புலை மாதர்...மருவும் வேட்கை யான்" (பிரமோத. 4 : 4). 6. ஊழ் குதல் (தியானித்தல்). "கழல்களை மருவாதவர் மேல் மன்னும் பாவமே" (தேவா. 501 : 1). ஊழ்குதல் மனத்தாற் பொருந்து தல்.

மரு—மருமம்=1. தழுவும் மார்பு. "மருமத்தி னெறி வேல்" (கம்பரா. கையடை. 11). 2. உயிர் நாடியான உறுப்பு. "எங்கு மருமத்திடைக் குளிப்ப" (பு. வெ. 7 : 23). 3. மறை பொருள் (இரகசியம்). (சங். அக.). 4. உடம்பு. "மந்தர வலியின் மருமம்" (ஞான. 59 : 20).

மரு—மார்=1. நெஞ்சு, மார்பு. "இப்பாதகன் மாரி னெய்வ னென்று" (கம்பரா. இராவணன் வதை. 192 . 2. நான்கு முழமான நீட்டலளவை. "ஊரில் கலியாணம், மாரில் சந்தனம்." (பழ.).

க. மார்.

மார்க்கண்டம், மார்க்கவசம், மார்க்குழி, மார்க்கூடு, மார் வலி, மார்யாப்பு மாராப்பு) முதலியன மரபு வழக்கான கூட்டுச் சொற்கள்.

மார்—மார்பு=1. நெஞ்சு. "கள்ளற்றே கள்வநின் மார்பு" (குறள். 1288). 2. பெண் நெஞ்சு, முலை. மாரில் கைபோடு கிறான். (உ. வ). 3. வடிம்பு. "ஏணி யெய்தா நீணெடு

மார்பின்...கூடு'' (பெரும்பாண். 245). 4. தடாகப் பரப்பு. ''மார்பின்மை படி......குலவரை'' (பரிபா. 15: 9). 5. அகலம். (சது.). 6. நான்முழ நீளம்.

ம. மார்பு.

மார்பு—மார்பம்=நெஞ்சு, மார்பு. பொன்றுஞ்சு மார்பம். (சிலப். 19 : 61). மார்பம்—மார்பகம்.

மரு—மருங்கு=1. (பொருந்தும்) பக்கம். ''கணையெரி யுரறிய மருங்கு நோக்கி'' (புறம். 23). 2. விலாப் பக்கம். ''கயிறு பிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கின்'' (புறம். 3). 3. இடைப்பக்கம், இடை. (சூடா.). 4. எல்லை. ''மருங் கறி வாரா மலையினும் பெரிதே'' (கலித். 48). 5. இடம். (பிங்.). 6. சுற்றம். ''அவனின் மருங்குடையார் மாநிலத்தில்'' (குறள். 526). 7. குலம். ''சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி'' (திருமுரு. 275). 8. செல்வம். ''மண்மேல் மருங் குடையவர்க் கல்லால்'' (சீவக. 2924). 9. நூல். ''தொன்மருங் கறிஞர்'' (குறிஞ்சிப். 18).

க. மக்கலு (gg).

மருங்கு—மருங்குல்=1. இடைப் பக்கமாகிய இடுப்பு. 2. இடை. ''கொம்பரார் மருங்கின் மங்கை கூற'' (திருவாச. 5: 67). 3. வயிறு. ''பசிபடு மருங்குலை'' (புறம். 260). 4. ''யானை மருங்குலேய்க்கும் வண்டோட்டுத் தெங்கின் ''பெரும்பாண்.352).

மரு[1]=மணமக்கள் பெண் வீட்டில் முதன் முறையாகக் கலந்துண்ணும் விருந்து. மரு—மருவு.

மருவுதல்=சொற்சிதைவு இலக்கண வழக்கொடு பொருந்தி வழங்குதல். மருவு—மரூஉ=1. நட்பு. ''மரூஉச்செய் தியார் மாட்டுந் தங்கு மனத்தார்'' (நாலடி. 246). 2. இலக்கண வழக் கொடு பொருந்தி வழங்குஞ் சொற்சிதைவு,

மருமகன்=1. மகன் போலப் பொருந்தும் மகள் கணவன். 2. ஒருவனின் உடன்பிறந்தாள் மகன் அல்லது ஒருத்தியின் உடன்பிறந்தான் மகன். இவ்விருவரும் மருமகன் நிலைமைக்கு வரக்கூடியவர்.

மருமகள்=1. மகள் போலப் பொருந்தும் மகன் மனைவி. 2. ஒருவனின் உடன்பிறந்தாள் மகள் அல்லது ஒருத்தியின் உடன்பிறந்தான் மகள். இவ்விருவரும் மருமகள் நிலைமைக்கு வரக்கூடியவர்.

மருமகன்—மருமான்=1. 'மருமகன்' (1) பார்க்க. ''மரு மான் றன்னை மகவென'' (கல்லா. 15). 2. 'மருமகன்' (2)

பார்க்க. "இமவானுர் மருமானு ரிவரென்று" (தேவா. 756 : 2). 3. வழித் தோன்றல். "குடபுலங் காவலர் மருமான்" (சிறு பாண். 47).

மருமகன்—மருகன்=1. 'மருமகன்' (1) பார்க்க. "மலைக்கு மருகனைப் பாடிப்பாடி" (திருவாச. 9 : 6). 2. 'மருமகன்' (2) பார்க்க. "வானவரைப் பணிகொண்ட மருகாவோ" (கம்பரா. சூர்ப்பண. 111). 3. 'மருமான்' (3) பார்க்க. "சேரலர் மருக" (பதிற்றுப். 63 : 16).

மருகன்—மருகு=1. மருகன் (1) பார்க்க. (யாழ். அக.). "மருகென்றே யவமதித்த தக்கன்" (கந்தபு. காமத. 110). 2. 'மருகன்' (2) பார்க்க. (யாழ். அக.).

மருகன்—மருகி (பெ. பா.).

மரு² =1. ஒன்றிலிருந்து இன்னென்ருெடு கலக்கும் மணம். "பூவொடு சேர்ந்த நாரும் மணம் பெறும்" (பழ.). 'புத்தோடு தண்ணீர்க்குத் தான் பயந்தாங்கு" (நாலடி. 139) என்பவற்றை நோக்குக.

ஒ. நோ: மணத்தல்=கலத்தல். மணம்=இருவகை நாற்றம்.

வெறுத்தல்=செறிதல். வெறு—வெறி=மணம்.

விரவுதல்=கலத்தல். விர—விரை=மணம்.

"மருவார் கொன்றை" (தேவா. 530 : 1). 2. நறுமணச் செடிவகை. (மலை). 3. மருக்கொழுந்து. "மருவுக்கு வாசனை போல் வந்ததால்" (வெங்கைக்கோ. 112). 4. இடம். (பிங்.).

மரு—மருகு=தவனம் என்னும் நறுமணச்செடி.

மரு—மருந்து=நோய் தீர்க்கும் பொருள். மருந்தாகும் வேரும் தழையும் பெரும்பாலும் மணம் மிக்கிருப்பதால், நோய் நீக்கும் பொருள் மருந்தெனப் பட்டது. "மருந்தென வேண்டாவாம்" (குறள். 942). 2. பரிகாரம். "மருந்தின்று மன்னவன் சீறில்" (கலித். 89). 3. சாவை நீக்கும் அமுதம். "கடல்கலக்கி மருந்து கைக்கொண்டு" (கல்லா. 41 : 26). 4. பசிநோய் மருந்தான சோறும் நீரும். "இரு மருந்து விளைக்கும் நன்னாட்டுப் பொருநன்" (புறம். 70). 5. நீர். 6. இனிமை. "மருந்தோவா நெஞ்சிற்கு" (கலித். 81). 7. வெடிமருந்து. 8. வசிய மருந்து. 9. செய்வினை மருந்து.

ம. மருன்னு, தெ. மந்து, க. மர்து.

மருந்து—மருத்துவம்—மருத்துவன்.

மருந்து—மருந்தம்=(மருந்தாகப் பயன்படும்) நஞ்சு. (W).

மரு—மருள் மருள்தல்=1. ஒத்தல். "அணைமருளின்று யில்" (கலித் 14). 2. வியத்தல். "இவ்வே முலகு மருள" (பரிபா. 5 : 35). 3. மயங்குதல். "மதிமருண்டு" (குறள். 1229). 4. வெருவுதல் சிருர் மன்று மருண்டு நோக்கி" (புறம். 46).

க. மருள்.

மருள்=1. மயக்கம். "வெருவுறு மருளின்" (சீவக. 2290). 2. திரிபுணர்ச்சி. "மருடீர்ந்த மாசறு காட்சியவர்" (குறள். 199). 3. பிறப்பு முதல் அறிவின்றி மயங்கியிருக்கும் எச்சப் பிறவி. "மாவும் மருளும்" (புறம். 28). 4. வியப்பு. "மருள் பரந்த வெண்ணிலவு" (திணைமாலை. 96). 5. கள். (யாழ். அக.) 6. கோட்டி (பைத்தியம்). (யாழ். அக.). 7. குறிஞ்சி யாழ்த் திறம் எட்டனுள் ஒன்று. (பிங்.). 8. மருளிந்தளப் பண். "மாலின் வரவு சொல்லி மருள் பாடுதல்" (திவ். நாய்ச். 9 : 8). 9. மேய். (பிங்.). 10. பேய் கொள்ளல். 11. புல்லுரு. (W.).

மருளன்=1. அறிவு மயக்கன். "பட்டப்பகற் பொழுதை யிருளென்ற மருளர்" (தாயு. கருணாகரக். 4). 2. தெய்வமேறி. 3. மதவெறியன்.

மருளாளி=1. தேவராளன். 2. தெய்வமேறி. 3. பேயாடி.
மருள—ஓர் உவமவுருபு. "கடுப்ப ஏய்ப்ப மருளப் புரைய" (தொல். உ. வ. 15).

மருளி—1. மயக்கம். "மருளிகொண் மடநோக்கம்" (கலித், 14). 2. மதிமயங்கி. "மருளி தான் மயங்கி" (யசோதர. 2:42).

மருட்கை=1. மயக்கம். "ஐயமு மருட்கையுஞ்" செவ்விதி னீக்கி" (தொல். பொ. 659). 2. எண்வகை மெய்ப்பாட்டுள் ஒன்ருன வியப்பு. "நகையே அழுகை இளிவரல் மருட்கை" (தொல். மெய்ப். 3).

மருட்பா=வெண்பாவும் ஆசிரியப்பாவும் கலந்துவரும் கலவைப்பா. தொல். பொ. 398).

மருண்மா=மதம்படு யானை. (திவா.).

மருள்—மிரள். மிரளுதல்=மயங்கி யஞ்சுதல்.

மருட்டு—மிரட்டு. மருட்டி=மிரட்டி.

மிரள்—மெரள். மெரளுதல்=மயங்கி யஞ்சுதல்.

மெரள்—மெருள். மெருளுதல்=மயங்கி அஞ்சுதல், ஆளுதல். மெருள்=அச்சம். (நன். 101, மயிலை).

மெருளி = மயங்கி யஞ்சி, அச்சங் கொள்ளி.

மெருள்—வெருள். வெருளுதல் = 1. மருளுதல். "எனைக் கண்டார் வெருளா வண்ணம் மெய்யன்பை யுடையாய் பெற நான் வேண்டுமே" (திருவாச. 32 : 3). 2. அஞ்சுதல். "பெருங்குடி யாக்கம் பீடற வெருளி" (பெருங். மகத. 24 : 84). 3. மாடு குதிரை முதலியன மிரண்டு கலைதல்.

வெருள் = 1. அஞ்சத் தக்கது. "நின் புகழிகழ்வார் வெருளே" (திருவாச. 6 : 17). 2. மனக் கலக்கம். (சூடா.).

வெருளி = 1. மருட்சி. "வெருளி மாடங்கள்" (சீவக. 532). 2. வெருளச் செய்யும் புல்லுரு முதலியன. 3. வறியாரை வெருட்டும் செல்வச் செருக்கு. "வெருளி மாந்தர்" (சீவக. 73).

வெருள்—வெரு = அச்சம். "வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன்" (குறள். 562). "வெருவரு நோன்ருள்...... கரிகால் வளவன்" (பொருந. 147). "வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும்" (தொல். பொ. 111).
வெரு—வ. பிரு (b).

ஒ. நோ : *OE foer, OS var, OHG fara, G. (ge) fahr, ON far, E fear.*

வெரு—வெருவு. வெருவுதல் = அஞ்சுதல். "யானை வெரூஉம் புலிதாக் குறின்" (குறள். 599).

வெருவு = அச்சம். தெ. வெரப்பு.

வெருவருதல் = 1. அஞ்சுதல். வெருவந்த செய்யாமை (குறள்). 2. அச்சந்தருதல். "வெருவரு தானைகொடு செருப் பல கடந்து" (பதிற்றுப். 70, பதி).

வெருவா—வெருவந்தம் = அச்சம். (W.). வெருவெருத்தல் = அஞ்சுதல். "உயிர் நடுங்கி.......வெருவெருத்து நின்றனரால்" (உபதேசகா. சூராதி. 49).

வெருவு-வெருகு = அஞ்சத்தக்க காட்டுப் பூனை. வெருக்கு விடை யன்ன (புறம். 324).

க. பெர்கு—பெக்கு.

வெருகு—வெருக்கு = அச்சம். வெருக்கு வெருக்கென்றிருக்கிறது. (உ. வ.).

மரு—மறு—மறுகு = பண்டங்கள் செறிந்த பெருங்கடைத் தெரு. கூலமறுகு = எண்வகைக் கூலங்கள் செறிந்த மறுகு (சிலப். 8 : 73, அடியார். உரை).

மால்—மார்—மாரி=1. கருமுகில். "மாரிமாட் டென்னாற் றுங் கொல்லோ வுலகு" (குறள். 211). 2. மழை "மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்" (புறம். 35). 3. மழைக் காலம். "மாரி மலை முழைஞ்சின் மன்னிக் கிடந்துறங்கும்" (திவ். திருப்பா. 23). 4. நீர். (பிங்.).

ம., து. மாரி.

மால்—மழை=1. கருமை. "மழைதரு கண்டன்" (திரு வாச. 6 : 46). 2. நீருண்ட கருமுகில். "மழை திளைக்கு மாட மாய்" (நாலடி. 361). 3. மழைக்கால். "மழை வீழ்ந்தன்ன மாத்தாட் கமுகு" (பெரும்பாண். 363). 4. முகில் பொழியும் நீர். "கொழுநற் றொழுதெழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை" (குறள். 55). 5. குளிர்ச்சி "பெருமழைக் கண்" (குறள். 1239).

மழைத்தல்=1. கருநிறமாதல். "மழைத்திடு மெய்யுடை மாற்றலர்" (கந்தபு. சூரன்வதை. 132). 2. மழை நிறைந் திருத்தல். "மழைத்த வானமே" (கம்பரா. கார்கால. 2). 3. குளிர்தல். "மழைத்த மந்த மாருதத்தினுல்" (பெரியபு. திருஞான. 150).

மழை—ம. மழ, க. மளெ.

மல்—மலு=1. கருப்பு. 2. களங்கம். "மதி மறுச் செய் யோள்" (பரிபா. 2 : 30). 3. குற்றம். (பிங்.). "மறுவில் செய்தி மூவகைக் காலமும்" (தொல். புறத். 20). 4. மச்சம். "மறுவாயிரத்தெட் டணிந்து" (சீவக. 2). 5. அடையாளம். 6. பாலுண்ணி. (W.). 7. தோல் மேலுள்ள கரும்புள்ளி (mole).

மல் (மால்)=கருமை.

ஒ. நோ: *OE mal, OHG meil, Goth. mail, E mole, spot, blemish,* Small lump on human skin.

(தொடரும்)

---

## சோழர்கால இசைக்கருவி

வெண்கலத்தால் செய்யப் பெற்றதும் 3 அடி உயரமும் 70 கிலோ எடையுமுள்ளதுமான சோழர்கால 'குடமுழா' என்னும் இசைக்கருவி யொன்று அண்மையில், தமிழகப் புதை பொருள் ஆராய்ச்சித் துறையினரால், தஞ்சை மாவட்டத் திலுள்ள திருத்துறைப் பூண்டி சிவன் கோவிலிலிருந்து தோண்டியெடுக்கப்பட்டது. இவ் வழகிய இசைக்கருவியின் மீது 12 ஆம் நூற்றாண்டுக்குரிய தமிழ் எழுத்துக்கள் காணப் படுகின்றன.

# சங்கநூல்களில் மீன்கள்

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

(பரல்–அ, சஙஎஆம் பக்கத் தொடர்ச்சி)

**14. கோட்டுமீன் :**

சங்க நூல்களில் கோட்டுமீன் என்று ஒரு மீனினத்தைப் பற்றிச் செய்திகள் உள்ளன.

"கோட்டுமீன் எறிந்த உவகையர் வேட்டமடிந்
தெமரும் அல்கினர் ஏமார்ந் தனம்என" —நற்றிணை. 49

"மோட்டுமண லடைகரைக் கோட்டுமீன் கொண்டி
மணங்கமழ் பாக்கத்துப் பகுக்கும்
வளங்கெழு தொண்டி யன்னவிவ ணலனே" —அகம். 10

"கொடுந்தாண் முதலையொடு கோட்டுமீன் வழங்கு
மிருங்கழி யிட்டுச்சுர நீந்தி யிரவின்" —அகம். 80

"கடற்சிறு காக்கை காமர் பெடையொடு
கோட்டுமீன் வழங்கும் வேட்டமடி பரப்பின்
வெள்ளிறுக் கனவு நள்ளென் யாமத்து" —அகம். 170

"கொல்வினைப் பொலிந்த கூர்வா யெறியுளி
முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்
தாங்கரு நீர்ச்சுரத் தெறிந்து வாங்குவிசைக்
கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீ னெறிய"
—குறுந்தொகை 304

"மோட்டிரு வரால் அற் கோட்டுமீன் கொழுங்குறை
செறுவின் வள்ளை சிறுகொடிப் பாகற்." —புறம். 399

கோட்டுமீன் என்பதற்குச் சுருவென்று உரை கூறியுள்ளனர். சிலர் வாள்சுரு என்பதே கோட்டுமீன் என்று எழுதியுள்ளனர். ஆனல், சங்க நூல்களில் வாள்சுருவைப் பற்றித் தனியே வேறு பாடல்கள் கூறுவதால் கோட்டுமீன் வேறு, வாள்சுரு வேறு. கோட்டுமீன் சுருவைப் போன்று இருப்பினும் சுருமீன் அன்று. கோட்டுமீனைத் தற்காலத்தில் கொம்பன் சுரு என்று கூறுவர். இதன் தலை இரு பக்கங்களிலும் கொம்புபோல நீட்டிக்கொண்டு இருப்பதால் கொம்பன் சுரு என்றழைத்தனர். சங்க காலத்தில் கோட்டுமீன் என்றழைத்ததும் இதே காரணத்தால் என்று தெரிகின்றது. கோடு என்ற சொல் கொம்பு என்று

பொருள் தரும். கோட்டுமா என்ற பெயர் கொம்புடைய யானையையும், கொம்பு போன்ற பல்லுள்ள காட்டுப்பன்றியினையும் குறித்துச் சங்க நூல்களில் வழங்கியதைக் கவனிக்க வேண்டும். ஆதலின் கோட்டுமீன் என்ற சங்கப் பெயர் இன்று கொம்பன் சுரு என்றழைக்கப்படும் மீனைக் குறித்தே வழங்கிய பெயராகும். ஆங்கிலத்தில் இந்த மீனைச் சம்மட்டித் தலையன் சுரு (Hammer-headed shark) என்பர். இதன் தலை சம்மட்டி போல இருப்பதால் அவ்வாறு பெயரிட்டனர். இந்த மீன் ஆறடி முதல் பன்னிரண்டு அடிவரை வளரக்கூடியது. இந்த மீனின் இரு கொம்புகளிலே கண்களும் காதுகளும் உள்ளன.

கோட்டு மீனைச் சங்ககாலத்தில் வேட்டையாடினர் என்ற செய்தி பாடல்களில் வந்துள்ளது. இந்த மீனைக் கொண்டு வந்து வெட்டிப் பகுத்து உண்டனர். கோட்டுமீன் துண்டை வரால் மீனுடன் குழம்பிலிட்டு உண்டனர். கோட்டுமீனை வேட்டையாடியதைப் பற்றி ஓர் அரிய செய்தியைக் குறுந்தொகை 304 ஆம் பாட்டு கூறியுள்ளது. கொல்லுந்தன்மையுடைய கூரிய வாயுடைய எறியுளியை முகத்தில் அமையும்படி பொருத்திய உலர்ந்த மூங்கிலின் வலிய கோலை நீரில் எறிந்து கோட்டுமீனைக் கொன்று வாங்கும் விரைவான படகையுடைய பரதவர் என்று குறுந்தொகை 304 ஆம் பாடல் கூறியுள்ளது. இன்றும் சுருமீன்களையும் பெரிய மீன்களையும் சாட்டுளியால் (Harpoon) எறிந்து கொல்வதுண்டு. கோட்டுமீன் சுருமீனைப் போல ஆளைக் கொல்லும் வழக்கமுடையதாகும். "கோட்டுமீன் குழாத்தின் மள்ள ரீண்டினர்" என்று சீவகசிந்தாமணி (2325) கூறியுள்ளது. கொல்வதற்காகச் சூழ்ந்த கோட்டுமீன் கூட்டம் போல மன்னர் ஈண்டினர் என்று பொருள் கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். கோட்டுமீனை அறிவியலில் Sphyrna spp (Zygaena spp) என்றழைப்பர். மீனவர்கள் இந்தக் கோட்டு மீனில் மூன்று வகைகளைக் கூறுவர். நெட்டைக் கொம்பன் சுரு, குட்டைக் கொம்பன் சுரு, கட்டைக் கொம்பன் சுரு என்றழைப்பர். தெலுங்கில் கொம்பன் சுரு என்ற பெயர் வழங்குகின்றது. மலையாளத்தில் கண்ணன் கொடி என்றழைப்பர். தமிழில் மண் வெட்டிச்சுரு என்றொரு பெயரும் வழங்குகின்றது.

**15. வாள்சுரு :**

வாள்சுரு என்றொரு சுருவின மீனைப்பற்றிச் சங்கநூல்களிற் சில பாடல்கள் வருகின்றன.

"..............................கடுஞ்செலல்
வாட்சுரு வழங்கும் வளைமேய் பெருந்துறை" —அகம், 150.

"வாள்வாய்ச் சுறவின் பனித்துறை நீந்தி
நாள்வேட் டெழுந்த நயனில் பரதவர்
வைகுகட லம்பியிற் றோன்றும்" —அகம், 187.

"இறவுப்புறத் தன்ன பிணர்படு தடவுமுதற்
சுறவுக்கோட் டன்ன முள்ளிலைத் தாழை" —நற்றிணை, 19.

"திரைமுதிர் அரைய தடந்தாள் தாழைச்
சுறவுமருப்பு அன்ன முள்தோடு ஒசிய
இறவார் இனக்குருகு இறைகொள இருக்கும்"
—நற்றிணை, 131.

"திமில்மேற் கொண்டு திரைச்சுரம் நீந்தி
வாள்வாய்ச் சுறவொடு வயமீன் கெண்டி
நிணம்பெய் தோணியர் இகுமணல் இழிதரும்."
—நற்றிணை, 111.

வாள்சுரு என்றும் வாள்வாய்ச் சுறவு என்றும் சங்கநூல்கள் அழைத்துள்ளன. இந்தச் சுருவினத்தின் வாயில் ஈர்வாள் போன்று ஓர் உறுப்பு இருப்பதால் வாள்சுரு என்றழைத்தனர். வாள் போன்ற உறுப்பின் இருமருங்கும் இரம்பப் பற்கள்போல கூரிய முட்கள் உண்டு. தாழையின் முள்ளிலைபோலச் சுறவுக் கோடு இருந்ததாக நற்றிணை கூறியுள்ளது. கடுமையாகச் செல்லக்கூடியது என்றும் நீர்த்துறையிலும் காணப்படும் என்றும் அகநானூறு கூறியுள்ளது. திமில் மேல் ஏறிச் சென்று கடற்பரப்பைக் கடந்து வாள்சுருவையும் வலிய மீனையும் வெட்டி அவற்றின் கொழுப்பைத் தோணியில் போட்டுக் கொண்டு வருவர் என்று நற்றிணை கூறியுள்ளது. இக்காலத்தில் வான் சுருவை வேளாசுரு என்றழைக்கின்றனர். மலையாளத்தில் 'வாள்சுருவு' என்றழைப்பர். மகர சுருவு என்றுமழைப்பர். வாள்சுரு என்ற சங்கப் பெயரின் மரபில் இப் பெயர் உள்ளது. இந்தச் சுரு ஆற்றில் அலையேறும் காலத்தில் ஆற்றுத்துறையில் நுழைந்து செல்லும் என்றும் மீன்துறையார் கூறுவர்.

முக்கூடற்பள்ளு என்ற நூலில் பொருநையாற்றில் காணப் பட்டதாகக் கூறிய மீன்களில் 'வதைக்கும் மகரம்' என்று இந்த மீன் கூறப்பட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும். இதன் வாய் வாள் ஆறு அடி வரை வளரக்கூடியது. இந்த வாளால் மீன் கூட்டத்தைப் பக்கவாட்டத்தில் தாக்கி மீன்களைத் துண்டாக்கி விழுங்குகின்றது. இதன் உடலில் கிடைக்கும் ஈரலில் இருந்து நிறைய எண்ணெய் எடுக்கலாம். வாள்சுருவை வெட்டி நிணம் பெய்ததைப் பற்றி நற்றிணையில் கூறப்பட்டுள்ளது. இந்த நிணம் வாள்சுருவின் ஈரல்குலையாகவே இருக்கலாம். கம்பர்

இந்தச்சுருவை 'முள்தொகுவன்தண்டச்சுறவு' என்று வருணித்துள்ளது கவனிக்கத் தக்கது. பருளை விநாயகர்பள்ளு என்ற நூலில் 'தண்டைச் சுறவு' என்று இஃது அழைக்கப்பட்டிருக்கின்றது. கம்பர் கூறிய பெயரான தண்டச்சுறவு என்பதே தண்டைச் சுறவு என்று ஈழ நாட்டுத் தமிழில் வழங்கி உள்ளது. கம்பர் கூறிய பெயர் அவர் காலத்தில் தமிழ்நாட்டில் வழங்கியதாக இருக்கலாம். தண்டம் என்பது தண்டு என்று பொருள் தரும். வலிய முள்தண்டை வைத்திருப்பதால் வன்தண்டச் சுறவு எனப்பட்டது. தமிழ்நாட்டில் இருவகை வாள்சுரு இருப்பதாகக் கூறுவர். வாள்சுருவை ஆங்கிலத்தில் Saw fish, Sword fish என்றும் அறிவியலில் Pristis perrotteti (Pristis cuspidatus) என்றும் கூறுவர்.

இந்த மீனின் வாளைப் பரதவர்கள் நட்டு வணங்கினரென்று பட்டினப்பாலை கூறியுள்ளது.

> "சினைச்சுறவின் கோடுநட்டு
> மனைச்சேர்த்திய வல்லணங்கினான்." —பட்டினப்பாலை 86-87

தணிகைப் புராணம் 'கோட்சுருமருப்பு' என்று அழைத்துள்ளது. சுருக் கொம்பில் வரும் தெய்வத்தைச் 'சுறவுக் கோட்டுக் கடலரசன்' என்று ஆனைக்காப்புராணம் கூறியுள்ளது. மலையாளத்தில் வாள்சுரு மீனைக் கடல்ராசன் என்றும், தேவமச்சம் என்றும் கூறுவது இது சார்பாகக் கவனிக்கத்தக்கது. கடலரசன் இந்த மீனின் மேல் இவர்ந்து வருவதாகவும் மலையாள மீனவர் கூறுவர். நெய்தல் நிலத்தில் நுளையர்க்கு வலைவளந் தப்பின் அம் மகளிர் கிளையுடன் குழீஇச் சுறவுக்கோடு நட்டுப் பரவுக் கடன் கொடுத்தபின் ஆண்டு வருணன் வெளிப்படுமென்றார். அவை 'சினைச்சுறவின் கோடு நட்டு மனைச்சேர்த்திய வல்லணங்கினான்' எனவும் வரும் என்று நச்சினார்க்கினியர் தொல்காப்பிய அகத்திணைச் சூத்திரத்துக்குச் (5) சொல்லிய உரையில் கூறியுள்ளார். ஆனால், நச்சினார்க்கினியர் சுறவுக்கோடு நட்டால் வருணன் வெளிப்படுவான் என்று கூறியது அவருடைய கற்பனையாகவே தெரிகின்றது. சுறவுக்கோட்டுத் தெய்வத்திற்கும் வருணனுக்கும் யாதொரு தொடர்புமில்லை. சுறவுக்கோட்டை வணங்குவது பழங்கால மீனவக்குடியினரின் மரபு வழக்கமாகும். அதை வேதகால ஆரியரின் கடவுளான வருணனோடு இணைத்துக் காட்டியது சிறிதும் பொருத்தமன்று. சிந்துநதிப் பக்கத்தில் உள்ள மக்ரான் (Makran) கடற்கரையில் எல்லா மதத்தைச் சேர்ந்த மீனவர்களும் சுறவுக்கோட்டை அவர்களுடைய கோயிலில் தொங்கவிட்டு வழிபடுகின்றனர். மீனவர்

களுக்கு நிறைய மீன் பிடிபட வேண்டும் என்றும் கடலிலிருந்து மீனவர்கள் பாதுகாப்பாகத் திரும்ப வேண்டும் என்றும் அந்தக் கோயிலில் உள்ள பூசாரி வேண்டிக்கொள்வானும். அந்தமான் தீவுப் பழங்குடி மக்களும் சுறவுக்கோட்டை வணங்குவராம். ஆதலின் நச்சினார்க்கினியர் கூறிய வருணன் செய்தி தவறாகும். சுறவுக்கோட்டை வணங்குவது பழங்குடி மக்களின் பண்டைய மரபாகும். சங்க காலத்தில் தமிழ்நாட்டுப் பரதவர் சுறவுக் கோட்டை மனையில் வைத்துக் கடல்தெய்வத்தை வரவழைத்து வலைவளந் தருவதற்காக வழிபட்டனர் என்று தெரிகின்றது. வாள் சுறாவைப் பிற்காலத்தில் மகரம் என்று அழைத்ததாகத் தெரிகின்றது. சுறாவையும் மகரம் என்று அழைப்பதுண்டாயினும் சிறப்பாக மகரம் என்பது வாள்சுறாவென்றே தெரிகின்றது. ''மகரத்தொடு சுறவும் கொணர்ந்தெற்றும் மறைக் காடே'' என்று சுந்தரர் பாடியிருப்பதைக் கவனிக்க வேண்டும். சுறா வேறு மகரம் வேறு என்பது தெளிவாகத் தெரிகிறது. மகரம் என்பது வாள்சுறாவென்று தெளிவாகின்றது. இந்த வழக்கு இன்றும் மலையாளத்தில் உள்ளது. மகரத்தின் சங்க காலத்தமிழ்ப் பெயர் வாள்சுறாவாகும். (தொடரும்)

---

## வள்ளுவர் கோட்டத் திறப்புவிழாவில் குடியரசுத் தலைவருக்கு அளிக்கப்பெற்ற திருக்குறள் ஆங்கிலப் பதிப்பு

திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்களால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்ட திருக்குறள் நூல் அழகிய தோல் கட்டடம் செய்யப்பட்டு, வள்ளுவர் கோட்டத் திறப்புவிழாவின்போது குடியரசுத்தலைவர் மாண்பமை பக்ருதீன் அலி அகமது அவர்களுக்குத் தமிழக அரசால் அன்பளிப்பாக வழங்கப்பெற்றது. இந்நூலினைச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தமிழக அரசு விரும்பியவாறு சிறந்த முறையில் கட்டடஞ் செய்து கொடுத்தது.

## தனித் தமிழும் கலப்புத் தமிழும்

பிற்காலத்திற் புதிய புதியவாகத் தமிழிற்புகும் கொள்கைகளெல்லாம் தமிழுக்கு உரியனவுமல்ல, தமிழை வளர்க்க வந்தனவுமல்ல. அவைகளெல்லாம் தமிழை வளர்க்க வந்தன வல்ல வென்பதற்கு அக்கொள்கையினை உடையார் வடமொழி முதலான பிறமொழிச் சொற்களை அதனுள் வரைதுறையின்றிப் புகுத்தி, ஆயிரக்கணக்கான தமிழ்ச் சொற்களை வழங்க விடாமற் செய்த கொடுமையால் நன்றாக அறியலாம்.

—மறைமலையடிகளார்

(மறைமலையடிகளார் உரைமணிக் கோவை: பக். 76)

# சிற்ப ஓவிய மரபுகள்—ஓர் அறிமுகம்

[மின்னூர் சீனிவாசன், எம். ஏ., எம். லிட்.]

ஓவியத்தின் மரபையும் சிற்பப் படிமக் கலையின் மரபையும் அறிவது தமிழ்க்கலைப் பண்பாட்டை உணர்ந்தறிவதாகும். சிற்ப ஓவிய மரபுகள் பல இந்தியா முழுவதும் பரவியிருந்ததைத் தமிழ்க்கலை மரபும் இந்தியக் கலை மரபும் காட்டும்.

நடராசர் சிலையும் புத்தர் உருவச்சிலையும் உள்ளவரை இந்தியக் கலைமரபின் தனிப்பெருமை அழியாது என வங்காள ஓவிய மேதை நந்தலால் போசு பெருமிதங்கொள்வர். அயல் நாட்டுச் சிற்பங்கள், உருவங்களை உள்ளது உள்ளவாறே-கண்ணுக்குத் தோன்றுகின்றபடியே அமைக்கப்படுவன. நம் நாட்டுச் சிற்பங்கள் உள்ளதை உள்ளபடியே காட்டும் நோக்கம் உடையன அல்ல. இந்தியச் சிற்பி கற்பனை நிறைந்த கலைமரபினைப் போற்றுபவன்; இயற்கையில் தான் காணும் உருவங்களின் தோற்றங்களில் மாறுதல் புரிந்து கற்பனைத் திறனால் கூட்டியோ மிகைப்படுத்தியோ அமைக்கும் கலை வழியினன். இயற்கை நிலைகளை மாற்றி அமைப்பதோடு அளவைகள், கனபரிமாணங்கள் தன் கலைத்திறனை அடக்கிவிடாமல் அவற்றை வென்று உருப்பெறும் வகையில் தன் கலைப்படைப்பை அமைப்பதில் இந்தியச் சிற்பி, தமிழகச் சிற்பி நிகரற்று விளங்குகின்றான். உலகப் புகழ் படைத்த கிரேக்க நாட்டுச் சிற்பிகளும் உடற் கூற்றளவை (Anatomy) களைக் கருதி அவற்றை ஒட்டியே சிற்ப உருவங்களை, தெய்வ உருவங்களை அமைத்தனர். மேலே குறிப்பிட்ட நடராசர் சிலையும் புத்தர் சிலையும் இந்தியச் சிற்பியின் அளவை-பரிமாண அறிவை விட, கற்பனை ஆற்றலையே வெகுவாக வெளிப்படுத்துவன; கவின் உணர்வையே (Aesthetics) புலப்படுத்துவன. குகைகளில் ஆதிகால மனிதன் வாழ்ந்த நாளில் வரைந்த ஓவியங்களிலிருந்து சங்கேதமரபு (Symbolism) நிலவி வந்ததும் நடராசர் புத்தர் ஆகிய உருவங்களில் அது தன்னிகரற்று அமைந்திருப்பதும் எண்ணுங்கால் இந்தியக் கலையின் பழைமையும் கற்பனைப் போக்கும் இன்னவை என அறியலாம்.

இயற்கையில் உள்ள காட்சியை உள்ளவாறே பிறழாமல் கலையில் உருப்படுத்தினர் கிரேக்கச் சிற்பிகள். இந்தியச் சிற்பிகள் இயற்கையோடு ஒன்றி உணர்ந்தனர் எனினும் இயற்கையின் நிலைகளை, கலையுருவம் படைக்கும்போது மாற்றி அமைக்கும் வகையில் வென்றனர்; கடந்தனர். இதனை,

"If man is a part of Nature, like flower in the creeper, or the green foliage of the trees, the spirit of them both must be so realised that one may not be in conflict with the other. But at the same time the object of the artist is not only to be faithful to nature, but to transcend it" Fundamentals of Indian Art—p. 27,) எனக் குறிப்பிடும் அறிஞர் தாசகுப்தா (S. N. Das Gupta) வின் மொழிகளில் தெளிகின்றோம்.

கிரேக்கச் சிற்பி கண்ணுக்குக் கலைவிருந்து நல்குங்கால் இந்தியச் சிற்பி காட்சி கடந்து கருத்து—தத்துவங்கள் ஆகியவற்றிற்குரிய வடிவங்களைப் படைக்கும் கலைமரபை மேற்கொண்டுள்ளான். காணும் காட்சிப் பொருளையே முற்றும் சார்ந்து விடாமல் அளவைகளை மீறிய—ஆனால், அளவை பற்றிய அறிவு (Knowledge of Anatomy) பொருந்திய உருவங்களைப் படைத்து வெற்றி பெற்றவன் இந்தியச் சிற்பி. படைக்க எடுத்துக் கொண்ட உருவங்களின் அளவைகளை மட்டும் கருத்தில் கொண்ட சிற்பியால் அவ் வுருவங்களின் ஊடேயும் புறத்தேயும் நிலவும் பொலிவினைக் காட்ட இயலாது.* (பரிமாண) அளவைகளை மட்டுமே கருத்தில் கொள்ளாத—படைப்புக் கற்பனையுள்ள கலைஞனால் வடிக்கப் பெற்றதே புத்தர் சிலையுருவம். இதனை, "இன்று நாம் காணும் புத்த படிமத்தின் வடிவழகு புத்தரின் இயற்கையான புறஅழகு அன்று; அஃது யாதெனில், புத்தர் தம் அகவழகின் புறத்தோற்றமே. எனவே, உருவமான பொருளின் புற அழகை விடுத்து அதன் அகவழகினையும் அருவமான பொருளின் தன்மையைப் புறத் தோற்றத்தாலும் சித்திரித்துக் காட்டுவது படிமக் கலையின் சீரிய பணியாகும். இது தமிழகக் கலையின் பொதுவான—சிறப்பான மரபாகும் என்றால் மிகையாகாது," என்று திரு. வி. கணபதி ஸ்தபதி கூறும் கருத்தால் மேலும் தெளிவாக உணரலாம். [உலகத் தமிழ் மாநாடு விழா மலர், படிமக்கலை, வி. கணபதி ஸ்தபதி, B. A. கண்காணிப்பாளர், அரசினர் சிற்பக் கலைப் பயிற்சி நிலையம், மாமல்லபுரம்.]

காட்சிகளின் இயற்கை அமைதியைச் சாராமல் கலைமரபில் கற்பனையைக் காட்டும் திறன் தமிழகச் சிற்பிகளின் சீர்மையை உணர்த்தும். அத்துடன் ஆடற்கலைப் பாணியை, சித்திரத்திலும் சிற்பத்திலும் அமைத்துப் போற்றிய திறனையும் குறிப்பிட வேண்டும். உணர்வுகளையும் கருத்துகளையும் நன்கு மனத்திற்

---

*"The Indian artist felt that he had a right to subordinate the anatomical part in the interest of the expression of the inner life". S. N. Das Gupta—The Fundamentals of Indian Art.

பதியும் வண்ணம் ஆடற்கலை அபிநயங்கள் வெளிப்படுத்தும். ஆகையால், சிற்பத்தில் அம் மரபையும் அமைப்பது போற்றத் தக்கதாயிற்று. இத்தகு கலைவழியுடன் கருணை, அன்பு ஆகிய பண்புகளைத் தடையின்றி, கலையுருவத்தின் உடலெல்லாம் வழிந்தோடுமாறு காட்ட முயற்சி எடுத்துக்கொண்டமையால் தெய்வச் சிலையுருவங்கள் தனிச் சிறப்புற்றன. மனித உடற் கூறுகளின் அளவைகளை மீறி, தெய்வ உருவங்களைக் கற்பனை செய்யும் சிற்பிக்கு மனித உடலின் நரம்புகளும், எலும்புகளும், தசைகளின் மேடு பள்ளங்களும் தடைகளாக நிற்கின்றன. இவை உடலின் விலங்குத் தன்மையைக் காட்டும் விறைப்பை உடையன. உருவமெங்கும் பொங்கி வழியும் கனிவும் குழைவும் பொலிவும் அமையப் படைக்கப்பெறவேண்டுமாயின் உடற் கூற்றளவை பற்றிய உணர்வு தளர்த்தப்பெறவேண்டும்.

படிமம் என்றால் தெய்வச் சிலையுருவத்தைக் குறிக்கும் பொருளில் பயன்பட்ட இலக்கிய வழக்கினை, ''கைவினை முற்றிய தெய்வப் படிமத்து'' என்ற சிலப்பதிகார அடியால் அறிகின்றோம். கடவுள் எழுதிய படிமம் என மணிமேகலையும் குறிக்கின்றது. ஆனால், இலக்கியங்கள் காட்டும் தெய்வ வடிவங்களுக்கும் முற்பட்ட காலத்தில் தெய்வங்களின் முழு உருவம் சிற்பிகளாலும் கற்பனை செய்யப்படாத காலமும் இருந்ததென்பது ஆராய்வார்க்குப் புலப்படும். ''ஆதிகாலத்தில் புத்தர் திருவுருவத்தை வைத்து வணங்காமல் பாத பீடிகை, தரும சக்கரம் ஆகிய அடையாளங்களை வைத்து வணங்கினார்கள். பிறகு புத்தருடைய திருவுருவம் கற்பிக்கப்பட்ட காலத்தில், அவர்கள் புத்தருடைய உருவத்தை வைத்து வணங்கினார்கள். மணிமேகலை, சிலப்பதிகாரம் என்னும் நூல்கள் புத்தர் வணக்கத்தைக் கூறும்போது பாத பீடிகையையும், தரும பீடிகையையும் கூறுகின்றன. ஏனென்றால், அந்தக் காலத்திலே புத்தருடைய உருவம் கற்பிக்கப்பட்டுச் சிற்பிகளால் சிற்ப உருவங்களாகச் செய்யப்படவில்லை'' என்பர் ஆய்வாளர் திரு. மயிலை. சீனி. வேங்கடசாமி. இந்நோக்கில் எண்ணுங்கால் ஆதிச்சநல்லூர் தாழி (அகழ்வில்)க் கண்டெடுப்பில் கிடைக்கப் பெற்ற பொருள்களில் 'வேல்' மட்டுமே காணப்படுவதன் காரணம் புலனாகும். முருகன் உருவமோ, காளி உருவமோ சிலையுருவாக்கம்பெறாத காலத்தே இறந்தார் வழிபாட்டுக்குரியதெனப் போற்றிய ''வேலை''த் தாழியில் உடன் இட்டு அடக்கம் செய்தனர் என அறியலாம். அதேபோல ''இந்திரனுடைய உருவத்தை வைத்து வணங்காமல் அவனுடைய வச்சிராயுதத்தை வைத்து வணங்கினார்கள்; அல்லது அவனது வெள்ளை யானை, கற்பகத் தரு இவற்றின் உருவங்களை வைத்து வணங்கி

ஞர்கள். இதைத்தான் வேற்கோட்டம், வச்சிரக் கோட்டம், வெள்யானைக் கோட்டம், அமரர் தருக் கோட்டம் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது''. (தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்-பக். 50. மயிலை. சீனி. வேங்கடசாமி) தெய்வப் படிமங்களை அமைத்த இந்திய, தமிழகச் சிற்பி, ''இயற்கை உடலமைப்பை —உடற்கூறுகளைத் தன்வயமாக்கி — இன்னும் சொல்லப் போனால்—அடிமைப்படுத்திக் கருணை, அன்பு, அமைதி, அழகு, மென்மை, முழுமை ஆகிய பண்புகள் பொருந்தியதாக இயற்றிவிடுகிறான். இதற்குச் சான்றாகப் புத்தர் படிமங்களும், திருமாலின் வடிவங்களும், சிவமூர்த்தங்களும் தேவியாரின் இனிய வடிவங்களும் அமையப் பெற்றிருப்பதைக் கூறலாம்'' என்பர் திரு. வி. கணபதி ஸ்தபதி.

ஓவியங்கள் பற்றிய குறிப்புகள், செய்திகள் சங்க நூல்களில் உள்ளன. எனினும் ஓவியம் தொடர்பான செய்திகள் பிற்காலத்தேதான் வழங்கின. இதனை ''References to painters and principles of their art are more frequent and detailed in Tamil works of slightly later period'' (J. M. Somasundaram Pillai, A History of Tamil Literature p. 339.) திரு. J. M. சோமசுந்தரம் பிள்ளை என்ற அறிஞர் கருத்துரையால் உறுதியாக அறியலாம்.

ஓவிய மரபில் திரைச் சீலைகளில் தீட்டப் பெறும் மரபுக்கும் முன்னே சுவர் ஓவியங்கள் வழங்கி வந்தன என்பர். அரண்மனைகளிலும் சித்திர மாடங்கள் இருந்தன. சங்க இலக்கியப் புலவர்கள் ஓவியனின் பார்வையோடு இயற்கைக் காட்சிகளையும் வாழ்விற்கண்ட பிறவற்றையும் சொல்லில் தீட்டினர். மதுரைக் காஞ்சியில் ஓவியரை, ''கண்ணுள் வினைஞர்'' என்ற தொடர் குறிக்கின்றது. ஓவியர் கரம் பற்றும் தூரிகையைப் பற்றிய அரிய குறிப்பொன்று நற்றிணையில் காணப்படுகின்றது. பாதிரி அரும்பு, சிவப்பு வண்ணத்தில் தோய்த்தெடுத்த (எழுதக் குவிந்த) தூரிகை போன்றது என்றார் புலவர். (நற்றிணை. 118) தூரிகை, துகிலிகை என்றிரு பெயராலும் வழங்கிற்று. Pallette—ஓவியர் கைக் கொள்ளும் தட்டு, மணிப்பலகை என வழங்கப்பட்டது. வண்ணந் தீட்டப் பெறாத அடிப்படைச் சித்திரம் (Sketch) 'புனையா ஓவியம்' என வழங்கப் பெற்றது.

இந்திய ஓவியத்தில் நோக்குத்திறன் (Perspective) அமையவில்லை என்பர். அத்துடன், பரிமாணங்களைக் காட்ட வண்ணங்களில் வேறுபட்ட ''தெளிப்பை''க் கையாளவில்லை என்பர். மேல்நாட்டு ஓவியங்களை நோக்க இவ்வகையில் இந்திய ஓவியங்கள் வேறுபடுகின்றன.

இந்திய ஓவியர்கள், சிற்பிகள் ஆகியோரைப் பற்றி நாம் தனிக் குறிப்புகள் அறிய வாய்ப்பில்லை. நடராசர் சிலையை, படைப்பு முதல் அழித்தல் ஈருக இறைவனின் இயக்கத்தைக் காட்டி உணர்த்தும் வகையில் படைத்த முதற் பெருங்கலைஞன் பெயரை நாம் அறியவில்லை. காரணம், சிற்பி, தன் தனி வாழ்வுப் புகழைக் காட்டிலும் தான் எடுத்துக் கொண்ட கலைப் பணி பெரிதென நம்பினான் எனவும் குறிப்பிடலாம். ஆயினும் சிற்பியை மன்னர் எவ்வாறு மதித்தனர்? சிறுபணி யாற்றும் தொழிலாளி உழைப்பாளி என்ற வகையிலா, அல்லது படைப் பாற்றல் உள்ள கலைஞன் என்ற வகையிலா என ஆராய வேண்டும்

---

## "கலைமகள்" உரிமையாளர்
## திரு. என். இராமரத்தினம் அவர்கள் மறைவு



கலைமகள், மஞ்சரி ஆகிய இதழ்களின் பதிப்பாளரும், 'மதராஸ் லா ஜர்னல்' (Madras Law Journal) 'சுப்ரீம் கோர்ட் ஜர்னல்' (Supreme Court Journal) ஆகிய சட்ட இதழ்களின் உரிமையாளருமான திரு. என். இராமரத்தினம் அவர்கள் 10-5-76'இல் 58 ஆவது அகவையில் மாரடைப்பால் காலமானார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம்.

இவர் காலஞ்சென்ற புகழ்பெற்ற நீதிபதி திரு. வி. கிருட்டிணசாமி ஐயரின் பெயரராவார். குழந்தைகளுக்காகக் 'கண்ணன்' என்ற இதழைச் சிறப்பாக நடத்திவந்தமைக்கும் 'கலைமகள் காரியாலயத்தின்' வழி குழந்தைகளுக்கான பல அழகிய நூல்களை வெளியிட்டமைக்கும் 21-5-63 அன்று குடியரசுத்தலைவர் டாக்டர். சாகிர் உசேன் குழந்தை எழுத்தாளர் சங்கச் சார்பில் திரு. இராமரத்தினம் அவர்களுக்குப் பாராட்டிதழ் வழங்கிப் பெருமைப்படுத்தினர். அப்போது குழந்தைகட்கான பல அழகிய சிறந்த நூல்களைக் கழகவழி வெளியிட்டமையின் பொருட்டு ஆட்சியாளர் வ. சுப்பையா பிள்ளையவர்கட்கும் பாராட்டிதழ் வழங்கப் பெற்றது. 'கலைமகள் காரியாலயத்தின்' வழி பல சிறந்த நூல்களை வெளியிட்ட பெருமையும் இவரைச் சாரும். திரு. என். இராமரத்தினம் பல்வேறு பொதுநலப் பணிகளில் பங்கு கொண்டிருந்தார். ஸ்டேட் பாங்கின் மாவிலக் குழுவின் உறுப்பினராகவும், 'மயிலாப்பூர் கிளப்'இன் செயலாளராகவும், பி. எஸ். உயர்நிலைப் பள்ளியின் சிறப்புப் பொறுப் பாளராகவும் பணியாற்றி வந்தார். மறைந்த இப் பெரியாருக்கு மனைவியும், ஆண்மக்கள் இருவரும் பெண்மக்கள் இருவரும் வயது முதிர்ந்த அன்னையாரும் உள்ளனர். இவர்தம் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# செய்திகளும் குறிப்புகளும்

## 1330 திருக்குறளையும் ஒப்புவிக்கும் 9 வயதுச் சிறுமி

குடந்தை நகராட்சி யானையடி துவக்கப்பள்ளி ஆசிரியர் மையத்தின் சார்பில் 27—3—76இல் திருக்குறள் ஒப்புவித்தல் போட்டி யொன்று நடைபெற்றது. போட்டியில் ஏராளமான மாணவ மாணவிகள் கலந்து கொண்டனர். அவர்களுள் குடந்தை நகராட்சி, அண்ணா நடுநிலைப் பள்ளியில் 5-வது வகுப்பில் படிக்கும் 9 வயதுச் சிறுமி 1330 குறட் பாக்களையும் தங்குதடையின்றி ஒப்புவித்து முதற் பரிசினையும் எல்லா ருடைய பாராட்டினையும் பெற்றாள். இச் சிறுமி எஸ். ஆர். வி. எஸ். நிறுவனத்தில் பணிபுரியும் வே. எத்திராசன் என்பவரின் திருமகளாவாள். இங்ஙனம் திருக்குறளைத் திருத்தமுறப் பயின்ற இச் சிறுமிக்கு நம் நல் வாழ்த்துகள்.

## தாய்மொழியின் சிறப்பும், குடியரசுத் தலைவரின் கருத்தும்

"ஆட்சியில் அவரவர் தாய்மொழிக்கே முதலிடம் தரப்படும். அதுவே பயிற்று மொழியாக இருக்கும். நீதிமன்றங்களிலும், சட்டப் பேரவைகளிலும் தாய் மொழியே இடம் பெறவேண்டும். அதே சமயத் தில் பொதுவானதொரு தொடர்பு மொழி இருக்க வேண்டும். இந்தி மொழியே அதற்கு ஏற்றது".

என்று சென்னையில் தமிழ் வடமொழி மற்றும் பிற மொழிகளுக் கான இல்லத்தினைத் திறந்து வைத்துப் பேசுகையில் குடியரசுத் தலைவர் பக்ருதீன் அலி அகமது குறிப்பிட்டார்.

## மாவட்ட நீதி மன்றங்களில் இந்தியில் தீர்ப்பு

இன்னும் 6 மாத காலத்துக்குள் ராஜஸ்தான் மாநிலத்து மாவட்ட நீதிமன்றங்கள் அனைத்தும் இந்தி மொழியிலேயே தீர்ப்புகளை வழங்க வேண்டும் என்று ராஜஸ்தான் உயர்நீதி மன்றம் கடந்த 10—4—76இல் ஆணை பிறப்பித்துள்ளது.

## நீதி மன்றங்களில் தமிழில் தீர்ப்புப் பற்றி ம. பொ. சி

ஏப்ரல் 13ஆம் நாளிலிருந்து தமிழிலேயே தீர்ப்பு வழங்க வேண்டும் என்னும் ஆணையை ஓராண்டுக்கு ஒத்தி போட்டிருப்பதை மறு ஆய்வு செய்யுமாறு தமிழரசுக் கழகத் தலைவர், சிலம்புச் செல்வர் ம. பொ. சி அவர்கள் 8—4—76இல் தமிழக ஆளுநர் கே. கே. ஷா அவர்களிடம் கேட்டுக் கொண்டார். காந்தியடிகள் பிறந்த நாளாகிய அக்டோபர் 2ஆம் நாளிலாவது அதனைச் செயல்படுத்த வேண்டுமென்றும் அவர் கேட்டுக்கொண்டார்.

## செய்குத்தம்பிப் பாவலர் நூற்றாண்டு விழா

சீதக்காதி செந்தமிழ்க் கழகச் சார்பில் 18—4—76இல் சென்னை, கோகலே அரங்கில் சதாவதானி செய்குத் தம்பிப் பாவலர் நூற்றாண்டு விழாச் சிறப்பாக நடைபெற்றது. கவிஞர் தா. காசிம் அவர்கள் தலைமை யில் பாட்டரங்கும், சிலம்பொலி செல்லப்பனார் அவர்களை நடுவராகக் கொண்டு பட்டிமன்றமும், A. K. A. அப்துல் சமத், M.A., M.P

அவர்கள் தலைமையில் உரையரங்கமும் நடைபெற்றன. பாவலரின் சிறப்புப் பற்றி அறிஞர்கள் பலர் உரையாற்றினர். புலவர் நாஞ்சில் சா. நன்றியுரை கூறினர்.

## விளம்பரப் பலகைகளில் தமிழுக்கு முதலிடம்

தமிழ் நாட்டிலுள்ள கடைகள், தொழிற்சாலைகள், பணிமனைகள் ஆகியவற்றின் விளம்பரப் பலகைகளில் பருமனான எழுத்து வடிவில் தமிழே முதலிடம் பெறுதல் வேண்டும். பிறமொழிகள் சிறிய எழுத்து வடிவில் அதன் கீழ் இருக்குமாறு அமைத்தல் வேண்டும் என்றும் அத்தகைய விளம்பரங்களுக்கே சென்னை மாநகராட்சி அனுமதி (License) வழங்க வேண்டும் என்றும் தமிழ் நாடு அரசு 6-5-76இல் ஓர் அறிவிப்பு விடுத்துள்ளது. விளம்பரப் பலகைகளில் தமிழ் இடம் பெற வேண்டும் என நாம் முன்னரே அறிவித்துள்ளமை அன்பர்கட்கு நினைவிருக்கலாம். இத்துறையில் இன்றுள் அரசும் அதனைச் செயல்படுத்துவது நம்முடைய மகிழ்ச்சிக்கும் பாராட்டுக்கும் உரியதாகும்.

## லால்குடி திரு. ஜி. வரதராஜன் அவர்கள் மறைவு

சிறந்த தமிழறிஞரும், செந்தமிழ்ப் புரவலர் என்னும் பட்டம் பெற்றவரும், அரசியலில் பேரீடுபாடுடையவரும், சமயப்பணி ஆற்றி வந்தவரும், சிறந்த அறக் கொடையாளரும், சிறந்த பண்பாளரும், திருக்குறள், திருவாசகம், திருமந்திரம் ஆகிய நூல்கட்குச் சிறந்த உரைகள் எழுதிய இலக்கிய ஆசிரியருமான லால்குடி ஜி. வரதராஜன் அவர்கள் 19-4-76 இல், தமது 65 ஆம் அகவையில் இறையடி சேர்ந்தார்கள் என்ற செய்தியறிந்து பெரிதும் வருந்துகிறோம். மறைந்த அப் பெரியாரின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## முன்னாள் இந்தியத் தலைமை நீதிபதி
## திரு. கே. சுப்பாராவ் மறைவு

இந்தியாவின் முன்னாள் தலைமை நீதிபதியும் நீதித் துறையில் நடுவராக 19 ஆண்டுகள் பணியாற்றியவரும் சிறந்த சட்ட வல்லுநருமான உயர் திரு கே. சுப்பாராவ் அவர்கள் 6-5-76 இல் பெங்களூரிலுள்ள அவர்தம் இல்லத்தில் தமது 74 ஆம் அகவையில் காலமானார் என்ற செய்தி அறிந்து வருந்துகிறோம். இவர் 1926 இல் சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்கறிஞராகப் பணியாற்றத் துவங்கினர். பின்னர் 1948 இல் சென்னை உயர்நீதி மன்ற நடுவரானர். 1956இல் ஆந்திர உயர்நீதி மன்றத்தின் தலைமை நடுவராக அமர்த்தப் பெற்றார். இங்ஙனம் பல்லாண்டுகள் நடுவர் பணியில் சிறந்து விளங்கிய இவர் 1958 இல் இந்தியத் தலைமை நீதி மன்றத்தின் (Supreme Court) நடுவராக அமர்த்தப் பெற்றுப் பின்னர் 1966 இல் அந் நீதிமன்றத் தலைமை நடுவரானர். 1967 இல் குடியரசுத் தலைவர் தேர்தலில் போட்டி யிடுதற்காக அப் பதவியினின்று விலகினர். ஆங்கில மொழியின் தேவையை வலியுறுத்த அவ்வப்போது பல அரசியல் மேடைகளில் பேசுவதும் இதழ்களில் அரசியல் கட்டுரைகள் எழுதுவதுமாக இருந்தார். நல்ல உடல் நலத்தோடு வாழ்ந்திருந்த இவர் 6-5-76 இல் திடுமென மார்படைப்பால் காலமானர். மறைந்த நடுவர் அவர்களின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## மு. சி. வீரபாகு பிள்ளை மறைவு

தூத்துக்குடியில் வாழ்ந்துவந்த சிறந்த நாட்டுப் பற்றாளரும் இந்திய விடுதலை இயக்கத்தில் ஈடுபட்ட வீரருமான திரு. மு. சி. வீரபாகு பிள்ளை அண்மையில் தமது 73ஆம் அகவையில் ஆரல்வாய்மொழியிலுள்ள தம் மகனார் இல்லத்தில் காலமானார் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். மகாத்மா காந்தியின் தொண்டர்களுள் நெல்லை மாவட்டத்தில் சிறந்து விளங்கிய சிலருள் திரு பிள்ளையவர்களும் ஒருவராவர். 1940இல் போர் எதிர்ப்பு அறப்போரில் ஈடுபட்டு ஓராண்டும் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் 6 திங்களும் சிறைத்தண்டனை பெற்றவர். தீண்டாமை ஒழிப்பு இயக்கத்தில் ஈடுபட்டு நாட்டுக்கு நல்ல பணியாற்றியவர். பல்லாண்டுகளாக மாவட்டக் காங்கிரசுக் கமிட்டியில் உறுப்பினராக இருந்து வந்தார். இவரை இழந்து வருந்தும் இவர்தம் குடும்பத்தாருக்கு எமது ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## டாக்டர் ந. நஞ்சீவி அவர்களின் பொன்விழா

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத்தலைவர் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் 50-வது பிறந்தநாள் விழா மாவட்ட மைய நூலக மண்டபத்தில் 1-5-76இல் மிகச் சிறப்பாக நடைபெற்றது. கவிஞர் வா. மு. சேதுராமன் வரவேற்புரை நிகழ்த்தினர். சிலம்புச் செல்வர் ம. பொ. சி. அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினர். அறிஞர்கள் பலர் டாக்டர் அவர்களின் சிறப்புகளைப் பாராட்டிப் பேசினர். பொன் விழா நினைவாகத் திரு. சு. சண்முகசுந்தரம் எழுதிய "நாட்டுப்புற இலக்கியத்தின் செல்வாக்கு'' என்னும் நூலும், கு எழிலரசு எழுதிய ''ஓர் எரிமலையின் எதிரொலி" என்னும் கவிதை நூலும் வெளியிடப் பெற்றன. 'தமிழ்ப்பணி' வெளியீடான 'டாக்டர் ந. சஞ்சீவியார் பொன் விழா மலரினை' டாக்டர் ஒளவை து. நடராசன் வெளியிட்டார். பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் துணைப் பேராசிரியர் டாக்டர். சி. பாலசுப்பிரமணியம் நன்றி கூறினர். டாக்டர் சஞ்சீவி அவர்களுக்கு எமது உளமார்ந்த வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## வாழ்த்துகிறோம்

தமிழரசுக் கழகத் தலைவர் சிலம்புச் செல்வர் திரு. ம. பொ. சிவஞானம் அவர்கள் தமிழகச் சட்டமன்ற மேலவைத் தலைவராகப் பதவி பெற்ற செய்தி அறிந்து மகிழ்கின்றோம். அன்னருக்கு எம் உளமார்ந்த வாழ்த்துகளைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

## குழந்தை எழுத்தாளர் சங்க வெள்ளி விழா

குழந்தை எழுத்தாளர் சங்க வெள்ளிவிழா 18—4—76இல் கிண்டி அரச மாளிகையில் நடைபெற்றது. குடியரசுத் தலைவர் பக்ருதீன் அலி அகமது அவர்கள் விழாவினைத் துவக்கி வைத்தார். திருவாட்டி சௌந்திரா கைலாசம் வரவேற்புரை நிகழ்த்தினர். குழந்தை எழுத்தாளர் சங்க நிறுவனர் திரு. அழ. வள்ளியப்பா அவர்களைக் குடியரசுத் தலைவர் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார். சங்கத்தினர் முன்னாள் தலைவர்களுக்கும், செயலாளர்கட்கும் பட்டயங்கள் வழங்கினர். சங்கச் செயலாளர் திரு. இ. எஸ். அரிகரன் நன்றி நவின்றார். இவ் விழா 19—4—76இல் தொடர்ந்து, மயிலை இராசேசுவரி திருமண மண்டபத்திலும் நடைபெற்றது.

## சமஸ்கிருதம் ஆக்கம் பெறுகிறது!

"தில்லிப் பல்கலைக் கழகம் சமஸ்கிருத ஆராய்ச்சிக்கென்றே ஒரு தனி நிறுவனம் ஏற்படுத்தவேண்டும். நாட்டு ஒருமைப்பாட்டிற்குச் சமஸ்கிருதம் மிக இன்றியமையாதது. சமஸ்கிருதத்தின் சிறந்த கலைகளை ஒவ்வொரு குடிமகனும் போற்ற வேண்டும். மாக்சு மூல்லர், ரேணு, கீத் ஆகிய ஆசிரியர்கட்குக் கவுடம், பாணினி, பதஞ்சலி, காளிதாசர், பவபூதி ஆகிய நம் பண்டைய சமஸ்கிருத ஆசிரியர்கள் எவ்வகையிலும் இளைத்தவர்களல்லர்" என்று 14-3-76இல், புது தில்லியில் மகாவீர் விஸ்வ வித்தியாபீடப் பட்டமளிப்பு விழாவில் பேசிய இந்தியக் குடியரசுத் துணைத் தலைவர் உயர்திரு. பி. டி. ஜட்டி குறிப்பிட்டுள்ளார்.

"தேவநாகரி எழுத்தில் அமைந்துள்ள இந்தியை ஆட்சிமொழியாக இந்திய அரசியல் சட்டம் ஏற்றுக்கொண்டிருக்கிறது.

"மொழி - இன - சமய வேறுபாடுகளின்றி இந்தியாவில் உள்ள நம் அனைவர்க்கும் சமஸ்கிருதம் பொதுவானது, பரம்பரையானது"

என்று 13-3-76 இல், புது தில்லியில் லால்பகதூர் சாஸ்திரி கேந்திரிய சமஸ்கிருத வித்தியாபீடத்தின் பட்டமளிப்பு விழாவில் பேசிய போது உள்துறை அமைச்சர் திரு. பிரமானந்த ரெட்டி குறிப்பிட்டுள்ளார்.

## ஆட்சிமொழி (சட்டம்) சொல்லாக்கக்குழு மாற்றியமைக்கப்பட்டது

சட்டச் சொல்லாக்கக் குழுவினை, தமிழக அரசு அண்மையில் மாற்றியமைத்து, ஓய்வுபெற்ற நீதிபதி திரு. எஸ். மகராசன் அவர்களைத் தலைவராக அமர்த்தியுள்ளது. ஓய்வுபெற்ற மாவட்ட நீதிபதி திரு. ஆ. சிதம்பரம் அவர்கள் முழுநேர உறுப்பினர். சட்டச் செயலரும், தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநரும் இன்னபிற அலுவலரும் உறுப்பினர்களாக அமர்த்தப்படுவார்கள்.

இக்குழு விரைவில் மொழிபெயர்ப்புப் பணியில் முன்னேற்றங் கண்டு நீதமன்றங்களில் தமிழ்மொழியை இடம்பெறச் செய்வார்களென நம்புகிறோம்.

## காளமேகப் புலவரைப் பற்றிய கல்வெட்டு

காஞ்சிபுரம் காமாட்சியம்மன் கோவிலில் அண்மையில் புதிதாக ஒரு கல்வெட்டு கண்டுபிடிக்கப் பட்டது. அது காளமேகப் புலவர் பாடிய ஒரு பாட்டாகவே அமைந்திருக்கிறது. அப் பாடலில் காளமேகத்தின் பெயர் 'காள முகில்' என்று குறிக்கப்பட்டுள்ளது. சாளுவ திருமலை என்ற மன்னன் துலாபாரம் செய்த செய்தியும் வேறு சில பாடல்களும் இக் கல்வெட்டினால் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளமை இதுவே முதல் தடவையாகும். காளமேகம் திண்டிவனம் பக்கமுள்ள எண்ணாயிரம் ஊரிற் பிறந்தவர் என்ற செய்தியும் தெரிய வருகிறது. இக் கல்வெட்டில் அரைகுறையாகக் காணப்படும் பாட்டு ஒன்று வருமாறு:

"மண்ணிலிருவர் மணவாளங்...மண்ணளந்த
கண்ணந னிவங் பேர்காள முகில்—
.................................கண்ண
னவனுக் கூரெண்ணா யிரம்"

இந்தக் கல்வெட்டினைத் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையினைச் சேர்ந்த மாணவர்கள் படியெடுத்துள்ளனர் என்று ஆய்வுத் துறை இயக்குநர் டாக்டர் இரா. நாகசாமி கூறினார்.

———

# மதிப்புரை

## பிற்காலச் சோழர் வரலாறு

[தி. வை. சதாசிவபண்டாரத்தார். அண்ணாமலைப் பல்கலைக் கழகம் விலை ரூ. 15-00]

தமிழகத்தையாண்ட மூவேந்தர்களில் ஒரு பிரிவினர் சோழர்கள். அவர்களைப்பற்றிய விரிவான வரலாற்றைச் சான்றுகள் காட்டித் தெளிவாக எழுதியவர் பண்டாரத்தார். அவருக்கு முன்னும் பின்னும் அவரைப் போல விரிவாகச் சோழர் வரலாற்றை யாரும் தமிழில் எழுதவில்லை. இத்தகைய அரிய வரலாற்று நூல் மாணவர்கட்குப் பெரிதும் பயன் பட்டு வருகின்றதாகலின் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் இதனை மறு பதிப்பாக வெளியிட்டுள்ளது. முதன் முறையாக மூன்று பகுதிகளையும் ஒன்றாக இணைத்துக் கையடக்கமாக வெளியிட்டுள்ளமைக்காகப் பல் கலைக் கழகத்தாரைப் பாராட்டுகிறோம்.

## சாத்தனார்

[அ. மு. பரமசிவானந்தம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம். விலை ரூ. 6-50.]

மணிமேகலையின் ஆசிரியரான சாத்தனாரைப் பற்றிப் பேராசிரியர் அ.மு.ப. அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நிகழ்த்திய சொர் ணம்பாள் நினைவுச் சொற்பொழிவுகள் நூல் வடிவம் பெற்றுள்ளன. 'சாத்தனாரும் நூலும்' அவர் காலத்து 'அரசும் சமூகமும்' அவர் தம் 'இலக்கிய மரபும் சமயநெறியும்' என மூன்று தலைப்புகளில் சொற்பொழிவுகள் அமைந்துள்ளன. மணிமேகலை ஆசிரியரான சாத்தனாரும் சங்கப் புலவரான சீத்தலைச் சாத்தனாரும் ஒருவரே என்பது நூலாசிரியர் துணிபு. அவர் தம் வரலாற்றை நூலிலுள்ள அகச் சான்றுகளைக் கொண்டும் புறச்சான்றுகளைக் கொண்டும் ஆசிரியர் நன்கு ஆய்ந்துள்ளார். மணிமேகலையைப் பற்றி ஆய்வு செய்வார்க்கும் சாத்தனாரைப் பற்றி நன்கு தெரிந்து கொள்ள விரும்புவோர்க்கும் இந்நூல் மிகமிக இன்றியமையாத பயனுடைய நூலாகும்.

## இலக்கிய வானில் சிந்தாமணி

[ஆசிரியர் : மு. அரவிந்தன் எம். ஓ. எல். தமிழ்நாடு ஜைன சங்க வெளியீடு. கிடைக்குமிடம்:- பாரிநிலையம், 59, பிராட்வே, சென்னை-1. விலை ரூ. 4-00]

சீவகசிந்தாமணி தமிழ் இலக்கியவானில் ஒளிவீசித் திகழும் ஒரு சிறந்த சுவைமிக்க இலக்கியம். தம் நுண்மாண் நுழைபுலங் கொண்டு ஆராய்ந்து 22 தலைப்புகளில் நூலின் சிறப்பினை எடுத்துக் காட்டுகிறார் இந் நூலாசிரியர். சிறந்த இலக்கியத் திறனாய்வு நூல். ஆராய்ச்சியாளர்க்கு நல்விருந்து.

## அமுதக் கனி

[ஆசிரியர் : மு. வலவன். சுபதி பதிப்பகம், 96-2, ராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை-14 விலை. ரூ. 7-00]

அதியமான் நெடுமான் அஞ்சி ஔவைக்கு நெல்லிக்கனி ஈந்த கதை சங்க இலக்கியத்தில் சுவைமிக்கதொரு கதை. அத்தகைய சீரிய தமிழ் வேந்தனின் வரலாற்றினை நாடகமாக எழுதியுள்ளார் திரு. வலவன். நாடகம் படித்துச் சுவைத்தற்கும் நடித்து மகிழ்தற்கும் ஏற்றது.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

# பிறபதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | |
|---|---|
| தெய்வத்தின் குரல் [சங்கராச்சாரிய சுவாமிகள் அருள்வாக்கு] | 25 00 |
| புதுமைப் பித்தன் சிறுகதைகள் | 7 00 |
| கானல் நீர்—கோமகள் | 10 00 |
| மயில் இறகுகள்—கவிஞர் செல்வ பாரதி | 7 50 |
| கைவல்ய நவநீதம் மூலமும் கிருதபாதம் உரையும் ஆராய்ச்சியும் | 7 00 |
| தொல்பொருளாய்வும் தமிழர் பண்பாடும்—சா. குருமூர்த்தி | 10 00 |
| சக்தி வழிபாடு—இரா. சீனிவாசன | 20 00 |
| குறட்செல்வம்: திறனாய்வு—குன்றக்குடி அடிகளார் | 9 00 |
| Cauveri, from source to sea—K. Nagarajan | 45 00 |
| Studies in Tuluva History and Culture—Prof G. Bhat | 250 00 |
| The Silver pilgrimage—M. Anantanarayanan | 5 50 |
| Grammar & Kuruntogai—S. R. Krishnambal | 12 50 |
| Lord Venkateswara and Alwars —G. T. Gopalakrishna Naidu | 2 25 |
| Bishop Selwyn & Tirunelveli—M. J. Sargunam | 2 25 |
| Tamil: an intensive course—Dr. V. I. Subramaniam | 6 00 |
| Political geography of the Chola country —Y. Subbarayalu | 10 00 |

---

## "செந்தமிழ்ச் செல்வி"

### கையொப்பத் தொகை விவரம்

செந்தமிழ்ச் செல்வி சிறந்த இலக்கியத் திங்கள் வெளியீடு. வரலாற்றுச் செய்திகள், இலக்கண இலக்கியக் கட்டுரைகள் தொடர்ந்து இதில் வெளியிடப் பெறுவதால், இஃது தொகுத்து வைத்துப் போற்றப்பட வேண்டிய இதழாகும். தனித்தனியாக இதழ்கள் விற்பனைக்குத் தரப்படமாட்டா. எனவே, கையொப்பம் செலுத்தி உடனே உறுப்பினராகுங்கள். கையொப்பம் விவரம் வருமாறு :

| | |
|---|---|
| ஆண்டுக் கையொப்பம் (உள்நாடு) | 10 00 |
| ,, (வெளிநாடு) | 20 00 |
| வாழ்நாள் கையொப்பம் (உள்நாடு) | 120 00 |
| ,, (வெளிநாடு) | 250 00 |

---

பதிவு எண் : M. 4899